Koviloor Digital Library

ரூ. 8.00

திருவள்ளுவர் ஆண்டு 2045 தை
ஜனவரி 2014

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்



Acc. No. 45726

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

Koviloor Digital Library

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : **தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின்அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | ½ பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 8.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. | 90.00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 1000.00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 2000.00 |

சந்தா – விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

நிர்வாகி
மக்கள் சிந்தனை
குன்றக்குடி – 630 206
சிவகங்கை மாவட்டம்
தொலைபேசி எண் : 04577 – 264227

இந்தியன் வங்கி, பிள்ளையார்பட்டி கணக்கு எண் : 554267544 மூலமும் மணியார்டர், வங்கி வரைவோலை / காசோலை மூலமும் அனுப்பலாம்.

ஆதீன இணையதள முகவரி : website : www.kkmutt.org

ஆசிரியர் : மரு. பரமகுரு

அச்சிட்டு வெளியிடுவோர் : ஸ்ரீ சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி

Koviloor Digital Library

91/1


# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் ஆண்டு 2045 மாதம் : தை

மலர் : 29 இதழ் : 1


## இனி ஒரு விதி செய்வோம்!




பொங்கல் பொங்கட்டும்!
மகிழ்ச்சி பொங்கட்டும்!
அன்பு பொங்கட்டும்!

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்.**

என்று விவசாயம் உலகின் ஆதாரமாய் இருந்த நிலை இன்று தலைகீழாய் மாறிவிட்டது.

உழுத நோன்பகடு அழி தின்றாங்கு என்று புறநானூறு பேசும். விவசாய வாழ்க்கையில் காளைகள் உழைப்பின் அச்சாணியாக விளங்குகின்றன.

நமக்குத் தேவையான உணவுப்பயிரை உற்பத்தி செய்து தந்த காளைகள், மனிதர்கள் ஒதுக்கிய கழிவாகிய வைக்கோலை உண்டு மீண்டும் உழைப்பைத் தந்து உணவைத் தருகின்றன. பற்றற்ற உழைப்பின் அடையாளம் காளைகள். எம்பெருமான் விடைக்கொடி ஏந்தி வருகின்றார். தம் வாகனமாகக் காளையினைக் கொண்டுள்ளார். பற்றற்ற உழைப்பின் அடையாளமான காளைகளின் செயல் மனிதகுலத்தின் நன்மைகளுக்காக உழைப்புத் தவம் இருப்பதே.

Koviloor Digital Library

உழுத நோன்பகடு அழி தின்றாங்கு - என்று புறநானூறு பெருமைப்படுத்தியுள்ளது. மனிதன் மண்ணை, காற்றை, நீரை, விண்ணை நேசித்து, வழிபட்ட காலம் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த காலம்.

இயற்கை வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வார் மறைவு, இயற்கை வேளாண்மை உலகிற்கு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும்!

இயற்கை வேளாண்மைக்காக உரத்த குரல் ஒலித்துச் செயல்பட்ட அந்தக் குரல் அடங்கி போயிற்று!

இன்று மனிதன் காடுகளை அழித்து காங்கிரீட் காடுகளை உருவாக்கிக் கொண்டிருக்கின்றான். விளை நிலங்களை வீட்டு மனைகளாக உண்டாக்குகின்றான். பசுவின்பால் மடியை அறுப்பதுபோல் அள்ளித் தரும் பூமித் தாயை மனைகளாய் சிதைக்கும் அவலம்!

மதுரைக்குப் பெயர் கடம்பவனம்!
குன்றக்குடி தலவிருட்சம் அரசவனம்!
பிள்ளையார்பட்டியின் தலவிருட்சம் மருதவனம்!

மதுரை கடம்பவன நகரத்தில் இன்று ஒரே ஒரு கடம்பமரம் மீனாட்சியம்மன் ஆலயத்தில் தங்கப் பட்டை இட்டுக் காட்சி தருகின்றது.

இயற்கை அழகு! அதனை ஆராதிப்போம்!
இயற்கை அறிவு! அதனைக் கற்றுக்கொள்வோம்!
இயற்கை இறைமை! அதனைப் போற்றுவோம்!

கடந்த காலத் தலைமுறை இயற்கையைப் பேணிப் பாதுகாத்தது. அது நீர்வளத்தைப் பேணிக் காத்த சிறப்பை என்ன சொல்வது!. அறிவியல் தொழில்நுட்பம் வளராத காலத்தில் அனைவரும் அதிசயிக்கும் வண்ணம் கல்லணை கட்டிய கரிகாலன் சாதனையை என்னவென்பது!.

Koviloor Digital Library

91/1

**எங்கிருந்தோ வந்தவன்** இன்றும் தாகம் தீர்க்கும் தண்ணீராய் முல்லைப் பெரியாறு நீர்த் தேக்கத்தில் இருந்து ஓடி வருகின்றான்! தன் சொந்தச் சொத்துக்களை விற்று முல்லைப்பெரியாறு நீர்த்தேக்கத்தை உருவாக்கிய **பென்னிகுக்** சாதனையை என்னவென்பது!

**செயற்கரிய செய்வார் பெரியர்** என்று சாதித்த சாதனைகளை என்னவென்பது!

நம் நீர்வளத்தைப் பற்றி ஆழ அகலமான நுண்மையான ஆய்வை காந்திகிராம பல்கலைக்கழகத் துணைவேந்தர் சோம.இராமசாமி அவர்கள் நிகழ்த்தி உள்ளார். அவர் ஆற்றிய சாதனைகள் கணக்கில் அடங்கா! தடம்மாறிய நதிகள், புதையுண்ட நதிகளைப் பற்றி அற்புத ஆய்வினை நிகழ்த்தி உள்ளார். மனிதன் நீர் வளங்களின் ஆதாரங்களை அழித்துத் தனக்குத் தானே தற்கொலை செய்து கொள்கின்றான்; நிலத்தைத் துண்டாடி அழிக்கின்றான்; காற்றை மாசு படுத்துகின்றான்; தண்ணீரை மாசு படுத்துகின்றான்; காற்று, நீர், நிலம் அனைத்தையும் மாசுபடுத்தி, நஞ்சுபடுத்தி இயற்கைக்கு நஞ்சு ஊட்டி தனக்குக் கல்லறை கட்டுகின்றான்; வரம் கொடுத்த ஆண்டவன் தலையில் கை வைப்பதுபோல தன்னைத் தாயாய் தாலாட்டும் இயற்கையை அழிக்கின்றான்! இதனால் மழை பொய்த்து நீர்வளம் குன்றியது.

நெல்லை விதைத்தவன் கடனை சுமக்கின்றான்.

பிள்ளைகளுக்கு பெயர் சூட்டிய காலம் போய் புயல்களுக்கு விதவிதமாய் பெயர் சூட்டும் காலமாக மாறிவிட்டது.

விண்ணின் நீர் பொய்த்து, கண்ணீர் பொழிகின்றது!

அதுவும் சில நேரங்களில் வறண்டு விடுகின்றது!

**உழவினார் கைமடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேம்என் பார்க்கும் நிலை**

– என்று திருக்குறள் கூறுகின்றது.

Koviloor Digital Library

உலகியல் வாழ்வை விட்டு விலகிப் போகின்றவரும், உழவன் உழைக்க மறந்தால் அல்லல்படுவர். விவசாய வாழ்க்கையை விட்டு விவசாயி விலக வேண்டிய நிலையில் இன்றைய தலைமுறை தடுமாறுகின்றது.

உற்பத்திப் பொருள்களை ஏற்றுமதி செய்ய வேண்டிய தேசத்தில் உற்பத்தியாளர்களையே ஏற்றுமதி செய்து கொண்டிருக்கின்றனர்.

இளைஞர்கள் அந்நிய நாட்டில் கூலி வேலைக்குச் செல்கின்றனர்.

மண்ணில் நட்டுத் தண்ணீர் (கண்ணீர்) விட்டு வளர்த்த தென்னை மரத்தில் விவசாயியின் கையில் இருந்து பறிக்கச் செய்த தேங்காய் விலைக்கும், சந்தையில் விற்கும் தேங்காய் விலைக்கும் வேறுபாடு!

விவசாயியின் உழைப்பில் சுரண்டல் நிற்கவில்லை!

இனி ஒரு விதி செய்வோம் அதை எந்தநாளும் காப்போம்.

நீர்வளம், மண்வளம், சுற்றுப்புறச் சூழல் மாசுபடாமல் காப்போம்.

உழவன் வாழ்க்கைப் பொருளாதாரம் செழிக்க,

தன்னை கசக்கி பிழிந்து இனிக்கும் கரும்பைத் தந்தவன் வாழ்வை இனிமையாக்க,

தித்திக்கும் சர்க்கரைப் பொங்கலைத் தந்தவன் வாழ்வு தித்திக்க,

உயர் தொழில்நுட்பத்தில் தோய்ந்துவிடாமல் வளர்ப்பிற்கு சென்று அடைய வேண்டும்.

இயற்கை மாசுபடாமல் அதிநவீன தொழில்நுட்ப சக்தியை உள்வாங்கி உற்பத்தியில் உயர் இலக்கை எட்டி விவசாயிக்கு நியாயவிலை கிடைத்திட உயர்தொழில்நுட்பம் ஒருங்கிணைந்த விவசாய கால்நடை தோட்டப் பயிர் வளர்ப்பிற்கு சென்று அடைய வேண்டும். விவசாயியின் வாழ்க்கைப் பொருளாதாரம் உயரவேண்டும்.

என்றும் வேண்டும் இன்ப அன்புடன்,

பொன்னம்பல அடிகள்

Koviloor Digital Library

91/1

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

கையால் நெருப்பை அள்ளிக்கொட்டினால் கைகளுக்குச் சூடு உண்டாகும். கை புண்ணாகும். இது இயற்கை. இதுபோல வினைகளை மனம் அழுந்திச் செய்தால், விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாகிச் செய்தால் அந்த வினையின் பயனை, செய்தவர் அனுபவிக்குமாறு செய்வது இயற்கை நியதி! இறைவனின் நெறிப்படுத்தும் தொழிற்பாடு! "ஊட்டும் வினை" என்பார் திருஞானசம்பந்தர். வினை செய்தலில் மனமே விளைவுகளுக்கு அல்லது எதிர் விளைவுகளுக்கு அடிப்படை என்பதற்கு எடுத்துக்காட்டு, சாக்கிய நாயனாரின் கல்லடியும் கண்ணப்பரின் செருப்படியும்! இவை இரண்டும் இறைவனுக்கு உவப்பாயின! காமவேளின் மலர்க்கணை உவப்பைத் தராதது மட்டுமல்ல. காமவேள் எரிய வேண்டியதாயிற்று. இவர்கள் வரலாற்றில் செய்த வினைப்பயன் கூட்டவில்லை. வினை செய்த நோக்கமும் உளப்பாங்குமே பயன் தந்தன. வினை இயற்றாமல் இருத்தல் கூடாது. வினைகள் இயற்றாமல் போனால் ஆன்மா வளராது; பக்குவப்படாது. குற்றங்களிலிருந்து விடுதலை பெறாது. வாழ்க்கையில் தேக்கம் ஏற்பட்டுவிடும். அதுவும் ஒருவிதத்தில் குற்றமேயாம்! ஆதலால் வினைகள் இயற்றி வாழ்தல் வேண்டும். செய்யும் வினைகள் - காரியங்கள் தற்சார்பாக அமையாமல் பொதுமை அடிப்படை காரணமாக அமையவேண்டும்! புவியை நடத்தும் வினைகள் இயற்றுதல் - நடத்துதல் வேண்டும். அதேபோழ்து பொதுவில் நடத்துதல் வேண்டும். செய்யும் வினைகளின் பயனை அவ்வப்பொழுது கணக்குப் பார்த்து நேர்செய்தல் வேண்டும். அப்படிச் செய்யத் தவறினால் வினைகளின் பயனும் தொகுநிலை அடைந்து எளிதில் அனுபவித்துக் கழிக்க இயலாத நிலையை அடையும். அன்றாடம் கணக்கு நேர் செய்தலே சிறந்த வாழ்வியல் முறை.

"வினையிலே கிடத்தல்!" - மனிதன் பிறந்த நாள் தொட்டு ஏதேனும் செய்து கொண்டிருக்கிறான்; செய்து கொண்டே இருக்கிறான். ஏன் செய்கிறான்? எதற்காகச் செய்கின்றான்? இது அவனுக்கே புரியாத புதிர். பலர் பயன், இலாபம் கருதியே வினை இயற்றுகின்றனர்; தொழில் புரிகின்றனர். ஏன்? இலாபம் மட்டுமல்ல, சுரண்டுவதற்காகவேகூட வினை இயற்றுகின்றனர்; தொழில் செய்கின்றனர். இந்த மனப்போக்கில் செய்யும்

Koviloor Digital Library

வினைகள் இன்ப வட்டங்களாக அமையும். அந்த இன்பத்தைத் துய்க்கும் பொழுது மனம் அடையும் நிலை என்ன? யார் கூற முடியும்? அந்த இன்பத்தை விருப்பு வெறுப்புக்களுடன் அனுபவித்தால் அந்த இன்பத் துய்ப்பு துன்பத்தின் விளைவுக்கு இரையாகும். அந்த இன்பத்தைப் பற்றின்றித் துய்த்தால் பின் தொடர்ச்சி இல்லாமல் போகிறது. அந்த இன்பத்தைத் தாமே துய்க்க வேண்டும் என்று துய்க்கும்பொழுது அது தொடர் நிலையாகிறது.

வினைகள் இயற்றும்போது உணர்வின்றிக் கிடத்தல் என்றால் என்ன? வினை இயற்றுகின்ற ஆன்மா இரு வேறு நிலைகள் அடையும். ஒன்று மெய்மறந்த நிலை. இது நல்லது. பிறிதொன்று போதையில் பிறந்த கிறுக்கு நிலை. இது தீயது. உணர்வு, "நான்" இழந்த நிலையில் வினை இயற்றும் வினை வரவேற்கத்தக்கது. பிறந்த உயிர்கள், வாழும் மாந்தர்கள் ஓயாது ஒழியாது வினை இயற்றிக் கொண்டே உள்ளனர். இந்த வினை, பிறவி வட்டத்தை நீர் அலையின் வட்டம் போல விரிவடையச் செய்து கொண்டே போகிறது. பிறப்பின் எண்ணிக்கை கூடிக் கொண்டே போகிறது. இந்தச் சூழ்நிலையில் இறைவன் கருணையால் பிறவிச் சூழலைக் கட்டுப்படுத்தி ஆட்கொண்டருள எண்ணி அருள்பாலிக்கிறான். இறைவன் வினைகள் இயற்றி வாழும் மாந்தரிடத்தில் தாயாக, தந்தையாக, ஆசிரியனாகக் காட்சி தருகின்றான். ஆனால், இந்த ஆட்கொள்ளலை எந்த ஆன்மாவும் விரும்புவதில்லை; விரும்பி வரவேற்பதில்லை. ஆனாலும் மனிதகுலம் ஏற்றுக்கொண்டாலும் சரி, ஏற்றுக்கொள்ளாது போனாலும் சரி இறைவன் உயிர்க்குலத்தை உய்யும் வகையில் எல்லாம் ஆட்கொண்டருளத் தவறியதில்லை. அவனே வலிந்து செய்யும் கருணை நிறைந்த கடமை இது.

சாதாரணமாக உலகியலில் உயிர் நிலையில் உள்ளவர்களிடம் தாழ்ந்தவர்கள் போய் அறிமுகம் செய்து கொள்வதே பழக்கம். ஆனால், இறைவன் ஆட்கொண்டருளும் பணியில் ஈடுபட்டிருக்கும் பொழுதெல்லாம் பெரியோனாகிய இறைவன், அவனுடைய கருணையினால் ஆட்கொள்ளப்படவேண்டிய நிலையில் உள்ள உயிர்களிடம் தாமே போய்த் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளும் நிலையே நடைமுறை. இந்த மண்ணகத்தில் வினைகள் இயற்றுதல், இலாபம் ஈட்டல், புகழ் பெறுதல், அதிகாரம் செய்தல் அம்மம்ம! எத்தனை வினைகள்! எத்தனை எத்தனை செயல்கள்! இந்தச் செயல்களைச் செய்யும் பொழுதெல்லாம் பொறிகளில் படியும் கறைகள்! புலன்களில் ஏறும் அழுக்குகள்! ஆன்மாவில் – உயிரில்

Koviloor Digital Library

ஏற்படும் விகாரங்கள்! இவையெல்லாவற்றையும் பொருட்படுத்தாது அழுக்குடலேயானாலும் அழுக்கேறிய ஆன்மாவேயானாலும் தாயினும் சாலப்பரிந்து ஆட்கொள்ள இறைவன் வருகின்றான். ஆனால் ஆன்மாக்கள் ஆட்பட ஒருப்படுவதில்லை. விரும்புவதில்லை. அறுவை மருத்துவத்துக்குப் பயந்து நோயினால் தொல்லைப்படுவாரில்லையா? பத்தியத்துக்குப் பயந்து நோய்ப்படுக்கையில் கிடப்பாரில்லையா? அதுபோலத்தான். ஆனால் இறைவனின் கருணை கைவிடுவதில்லை. நோயாளி அறுவை மருத்துவம் செய்து கொள்ள விரும்பாது போனால் மருத்துவன் விடலாமா? விடக்கூடாது. அதுபோல, இறைவன் உயிர்களை எப்போதும் நரகத்திலும் கூடக் கைவிடமாட்டான். இறைவன் சிறந்த மருத்துவன், வைத்தியநாதன், மூல நோய் தீர்க்கும் முதல்வன் இறைவன், ஆதலால், பிணியாளனைக் கைவிடுவதில்லை. அவன் பிணிகளை அடக்கியாளும் தலைவனாகின்றான். அவன் தலைவனானது மக்களுக்காகவே, வேறு காரணங்களுக்காக அல்ல. இறைவன் பைத்தியக்காரன்! குறியொன்றும் இல்லாதவன்! எது பற்றியும் கவலைப்படான்! ஏசினாலும் ஏத்தினாலும் உயிர்களை ஆட்கொண்டருளுவதே இறைவனின் தொழில்.

---

## அரசு அளித்த தொகையை செலவிட்ட யூசி

திருக்குறள் மொழிபெயர்ப்புக்காக தைவான் நாட்டு கவிஞர் யூசிக்கு தமிழக அரசு ஏற்கனவே ரூ. 5.40 லட்சம் அளித்தது. அந்தத் தொகையை "திருக்குறளும் உலக அமைதியும்" என்ற தலைப்பில் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் அறக்கட்டளை நிறுவ வழங்கினார் யூசி.

தைவான் நாட்டில் கடந்த 1951 ஆம் ஆண்டு மார்ச் மாதம் பிறந்தார் யூசி. அவர் 60-க்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்துள்ளார். திருக்குறள், பாரதியார், பாரதிதாசன் ஆகியோரின் கவிதைகளை சீனமொழியில் மொழிபெயர்த்துள்ளார். தைவான் மாணவர்களுக்குச் சீன வரி வடிவில் திருக்குறளை முற்றோதல் செய்யும் திட்டத்தைச் செயல்படுத்தி வருகிறார். தைவான் நாட்டில் முதல் முறையாக உருவாக்கப்பட்ட தமிழ்ச் சங்கத்தின் புரவலராகவும் தலைவராகவும் உள்ளார். இவருடைய படைப்புக்கள் ஆங்கிலம், பிரெஞ்சு, ஸ்பானிஷ், செக்கோஸ்லோவாகியா, மங்கோலியா ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

நன்றி : தினமணி

Koviloor Digital Library



# நமது காலத்து மகாத்மா - கோ. நம்மாழ்வார்

(கிருங்கை. சேதுபதி)

தாழ்வுற்று வறுமை மிஞ்சி தவறிக்கெட்டுப் பாழ்பட்டு நிற்கும் இந்திய தேசத்து வேளாண் பெருமக்களின் இதயத்துடிப்பாக, எழுச்சி நாயகனாக உலக அரங்கில் உலாவந்த உத்தமர், வேளாண் ஞானி கோ. நம்மாழ்வார்.

தமிழகத்து நெற்களஞ்சியமான தஞ்சை மாவட்டத்து, இளங்காடு என்னும் ஊரில், கோவிந்தசாமி என்பவரின் மகவாக, 06.04.1038ல் பிறந்த இவர் வேளாண்துறையில் இளம் அறிவியல் பட்டம் பெற்றவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தந்த அறிவியல் ஆய்வாளரான இவர், கோவில்பட்டி மங்கல வேளாண்மை ஆராய்ச்சி நிலையத்தில் ஆறு ஆண்டுகள் பணி செய்தார். இயற்கைவழி விவசாயத்திற்காகப் பணியைத் துறந்தார். பிறகு நோபல் பரிசு பெற்ற dominique pyre என்பவரின் நிறுவனத்தில் (களக்காட்டில்) பணியில் சேர்ந்தார்.

பெல்ஜியம் நாட்டு பெர்னார்ட் என்பவரைத் தமது குருவாகக் கொண்டு இயற்கை வேளாண்மைத் துறையில் களம் இறங்கியவர். பெர்னார்ட் இன்றும் ஆரோவில்லில் வாழும் இயற்கை வேளாண் வித்தகர். நீர் வளமே இல்லாத தரிசுப்பொட்டலைத் தமது உழைப்பால், தனிப்பெருஞ் சோலையாகச் செய்துகாட்டிய விஞ்ஞானி பெர்னார்ட். "பயிர் சுழற்சியையும் பல்லுயிர்ப் பாதுகாப்பையும் உறுதி செய்வது தனிப் பயிர் சாகுபடியில் இல்லை; கூட்டுப் பயிராய், அணி நிழல்காடாகத் தன் நிலப்பரப்பை அமைப்பதில்தான் இருக்கிறது" என்பதை அவரிடம் கற்றுக்கொண்ட நம்மாழ்வார், அதன்வழி பல மடங்கு தன் பணிகளை விரித்துப் பசுமைத்தாய் கொலுவிருக்கும் இல்லமாகத் தமிழகம் விளங்கக் கனவு கண்டார்; களப்பணிகள் பல மேற்கொண்டார்.

அத்தனை எளிதாக அது சாத்தியப்படவில்லை. பல்லாண்டுகாலமாய்ப் பயன்படுத்தி வந்த ரசாயன உரங்கள், பூச்சிக்கொல்லி நச்சுகள் பரவி மண்ணையும் மக்களையும் மன்னுயிர் அனைத்தையும் நோய்களுக்கு ஆளாக்கி அழிவுக்கு வழிகோலியதை அவரால் ஏற்க மனம் ஒப்பவில்லை. இயல்பாகவே, "நோய்நாடி நோய் முதல் நாடி பின்னர் அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செயல்பட"

Koviloor Digital Library

விழைந்தார்; விரைந்தார். கானகமே தனது தாயகமாக ஆக்கிக்கொள்ள விரும்பி, ஒருநாள் நவீன சித்தார்த்தராகத் தமது மனைவி மக்களிடம் விடைபெற்றுக் கொண்டார். புத்தரைப் போல, எளிய வாழ்வை மேற்கொண்டார். உலகெங்கும் உள்ள வேளாண் முயற்சிகளை ஆழக்கற்றார். உலக வரலாற்றையும், அதில் ஒளிந்திருந்த வஞ்சகச் சூதுகளையும் அதற்குக் களப்பலியான இந்திய வேளாண்மையையும் கண்டு கலங்கினார். குருதிக் கண்ணீர் கொட்டிடத் துடித்தார். அத்துயர் போக்கத் தம் உயிரையே ஆகுதிப் பொருளாய் அர்ப்பணித்து அல்லும் பகலும் அதற்கெனவே உழைத்தார். தனக்குமுன் வாழ்ந்த தமிழ்ஞானியரின் நூல்களையும், தமிழகத்து உழவாளர்களின் அனுபவங்களையும் உள்வாங்கிக் கொண்டார்.

இயற்கை எழுப்பித் தந்த புல்லையும், மரபார்ந்த நெல்லையும், ஆன்றோர்கள் அருளிய சொல்லையும் ஆயுதங்களாகக் கைக்கொண்டு களம் இறங்கினார். ஆதரவற்ற அனாதைகளாய் விடப்பட்ட, இந்திய தமிழக வேளாண்பெருமக்களை இணைத்து, இயற்கை வேளாண்மையை வலுப்படுத்தினார். சப்பானிய நாட்டு வேளாண்விஞ்ஞானி மாசனபு ஃபுகோகாவின் “ஒற்றை வைக்கோல் புரட்சி” நூலும், மகாத்மாகாந்தியின் “சத்தியசோதனை”யும் அவர்தம் தொண்டு வாழ்விற்குத் துணைசெய்த புத்தகங்கள், அத்தோடு, வள்ளுவரையும், இளங்கோவையும், கம்பரையும், ஔவையையும், பாரதியையும், பாரதிதாசனையும் தன்னுடைய களப்பணிக்குத் துணையாக்கிக் கொண்டார். இவர்களையெல்லாம் விடப் பெயர்கள் இல்லாமல், தத்தம் கருத்துக்களை, பழமொழிகளாகவும், விடுகதையாகவும், அனுபவப் பொன்மொழிகளாகவும் பதிவு செய்த பழந்தமிழ்மக்களின் ஏட்டில் எழுதா இலக்கியமாகிய நாட்டுப்புறக் கூறுகளையே அவர் மக்கள் மத்தியில் எடுத்துரைப்புக்கான மேற்கோள்களாக்கிக் கொண்டார். சாதி, சமய, தேச, இனபேதமின்றி, எந்த மேடையையும் தன் சொந்த மேடையாக்கிக்கொண்டு தன் சிந்தனைகளை விதைத்தார். மாற்றுக் கருத்தாளர்களையும் மனந்திருத்தித் தன் கருத்தை ஏற்றுக்கொள்ளும் வகையில் எடுத்துரைத்தார். “எத்துறை சார்ந்தோர் ஆயினும் இயற்கை இன்றேல் இல்லை” என்பதை ஒப்புக்கொள்ள அல்ல – உணர வழிவகை செய்தார்.

ஐரோப்பிய நாடுகள் மற்றும் இங்கிலாந்து, பிரான்ஸ், நெதர்லாந்து, பெல்ஜியம், சுவீடன், டென்மார்க், இத்தாலி, ஜெர்மனி, மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா ஆகிய பகுதிகளில் பயணம் செய்த நம்மாழ்வார், இறுதிவரையிலும், தமிழகத்து உழவரைப்போலவே உடையையும் உள்ளத்தையும் வாழ்வையும், வாக்கையும், அமைத்துக்

Koviloor Digital Library

கொண்டார். என்றைக்கும் வற்றாத காவிரித்தமிழை, அவர்தம் வாக்கு வழங்கிக்கொண்டே இருந்தது.

காந்தியடிகள் போல் மேலாடை துறந்தவர் நம்மாழ்வார். அவரைப் போலவே, தம் வாழ்நாளின் பெரும்பாலான நாட்களைப் போராட்டங்களிலும் பயணங்களிலும் செலவிட்டவர். எங்கு சென்றாலும் பேருந்து, ரயில் என பொதுப்போக்குவரத்து வசதிகளையே பயன்படுத்தினார்; மற்றவர்களுக்கும் அதையே வலியுறுத்தினார். அவரது அன்பர்களும், நண்பர்களும் அவருக்கு, கார் வாங்கித் தர முன்வந்தும், "சூழல் கேட்டைக் குறைக்க இதுவே போதும்" என்று தவிர்த்துவிட்டார்.

நம் நாட்டு வேப்பிலைக்கான காப்புரிமையைப் பெற ஜெர்மனியில் உள்ள சர்வதேச நீதிமன்றத்தில் வாதாடி மீட்டு, வென்று 250க்கு மேலான என்.ஜி.ஓக்களை உருவாக்கியவர். பாரம்பரிய விதை ரகங்களை அதிகம் நேசித்தவர். அதைப்பற்றிப் பேசும்போதெல்லாம் மத்திய நெல் ஆராய்ச்சி நிலையத்தின் இயக்குநராக இருந்த தேராலால் ஹெர்லால் ரிச்சார்யாவைக் குறிப்பிடுவார். அவர்தாம், இந்தியாவின் 22,972 பாரம்பரிய நெல் ரகங்களை வெளிநாடுகள் கைக்குச் செல்லாமல் பாதுகாத்தவர். அதனாலேயே தனது பணியையும் இழந்தவர். ரிச்சார்யா மற்றும் இயற்கை விஞ்ஞானிகளின் கோரிக்கைகளைப் புறந்தள்ளி, அத்தனை பாரம்பரிய நெல் ரகங்களையும் பன்னாட்டு நிறுவனமான ஸின்ஜெண்டாவிடம் 2003-ல் அரசு ஒப்படைத்தபோது, கண்ணீர்விட்டு அழுதவர் நம்மாழ்வார். "தண்ணீர் விட்டோ வளர்த்தோம் - சர்வேசா கண்ணீரால் காத்தோம் கருகத் திருவுளமோ" என்ற பாரதி வாக்கை அவர்தம் தூய கண்ணீர் பிரதிபலித்தது.

விதைக் காப்புக் குறித்த விழிப்புணர்வை வேளாண் பெருமக்களிடம் உணர்த்தவேண்டித் தமிழகம் எங்கும் விதை நெல் சேகரிப்புப் பயணம் மேற்கொண்டவர் நம்மாழ்வார். ஒருநாள் பூம்புகார் கூட்டத்தில் "காட்டு யாணம்" நெல்லை வழங்கி "நீங்க ஏன் பழம் பாரம்பரிய நெல் வகைகளை மீட்டெடுக்கும் பணிகளைத் தொடர்ந்து செய்யக் கூடாது" என கிரியேட் "நெல்" ஜெயராமனிடம் கூறினார். அன்று, அவர் விதைத்த விதை இன்று அதே "நெல்" ஜெயராமன் 158 பாரம்பரிய ரகங்களை மீட்கவும் பாதுகாத்துப் பயிரிட்டுக் கொடுக்கவும் வழிவகுத்திருக்கிறது என்பது வரலாற்று உண்மை.

அண்ணல் காந்தியடிகளுக்குப் பின் அவதரித்த இவரை, "அண்ணாச்சி" என்றே அழைக்கும் வழக்கம் எனக்கு. உயிர்நிகர்த்த அவர்தம் பொழுதுகள் சிலவற்றை எளியேனுக்கும் அளித்த வள்ளலார்

Koviloor Digital Library

இவர். இவரோடு ஒன்றிப் பணிசெய்த் நிகழ்வுகளில் ஒன்றை இங்கு நினைவுகூர்வது இவர்தம் அருளுணர்வை வெளிப்படுத்தப் பெரிதும் உதவும்.

ஓசூரின் பேருந்து நிலையத்தில், கடைவீதிகளில் நடக்கிறபோது வழியில் கிடக்கும் வாழைப்பழத் தோல்களை, பணத்தையோ, விலைமதிப்புள்ள பொருளையோ கண்டெடுக்கும் ஒரு குழந்தையின் குதூகலத்தோடு விரைந்தோடிப் போய் எடுத்து தனது ஜிப்பாப் பைக்குள் பத்திரமாய் அப்படியே வைத்துக்கொள்வார். இன்னொரு ஜிப்பாவில், பிளாஸ்டிக் (குப்)பைகள் இருக்கும். அவை பின்னர் மறுபயன்பாட்டுக்கு ஆகியே தீரும். வழியில், நிராதரவாக விடப்பட்ட மாடுகளைக் கண்டால் ஓடிப்போய்த் தழுவிக் கொடுத்து நேயத்துடன் பேசிக் கொஞ்சுவார். பைக்குள் கைவிட்டு பழத்தோலை விருந்தினருக்குக் கொடுத்து உபசரிக்கும் நேர்த்தியுடன் ஊட்டி மகிழ்வார். போவோர் வருவோர் யாரும் இவரை வேடிக்கை பார்ப்பதை வேடிக்கை பார்க்கும் என்னைப் பார்த்து, "குன்றக்குடி சாமி என்ன சொல்லுவாங்க. தெரியுமா சேதி? கிராமத்துல சாலையோரம் மரங்கள் நின்னா தோட்டத்துக்காரன் வேலியால வளைச்சு மரத்தைத் தன்னதாக்குவான். விட்டுட்டா அரசாங்கம் எண்களைக் குறித்துவைத்துத் தன்னதாக்கிக் கொள்ளும். யாரும் உரிமை கொண்டாடாத மாடுகளை ஒரு கிராமத்தான் தன்னதாகக் கொண்டு வந்து தொழுவத்தில் கட்டுவான். ஆக, நமது நாட்டில் மரங்களை அனாதையாகவிடாத மனிதன், மாடுகளை அனாதையாக விடாத மனிதன், தன் இனத்து மனிதர்களை மட்டும் அனாதைகளாக விடுவது என்ன நியாயம்"னு கேட்பார். "இப்போ, இந்த மாடுகளையும் அனாதையாக விட்டுட்டாங்களே" என்று வருந்தியுரைப்பார். இதுபோல் எத்தனையோ நிகழ்வுகள்.

வாழ்க்கையை, வரலாற்றை மக்களிடமிருந்து கற்றுத் தெளிந்தவர் அவர். கோயில் குளங்களும் அக்காலத்தில் கரிகாலன் கட்டிவைத்த கல்லணையும் மக்கள் நலம் பேணுவதற்கானவை. மழைவளம் கொண்டு மண்வளம் பேணிப் பயிர் வளர்த்து, உயிர் வளர்க்கும் திருப்பணிக்கு அர்ப்பணம் செய்யப் பெற்றவை என்பது அவர்தம் புரிதல். "தமிழ்நாட்டில் மொத்தம் 40 ஆயிரம் ஏரிகளை நம்முடைய முன்னோர்கள் கட்டி வைத்திருந்தார்கள். ஏர் பூட்டி பயிர் செய்யப்படுகின்ற இடங்களை ஏரி என்றோம். அதோடு சின்னதானால் குளம். ஆடு மாடு குளிக்கலாம். அதைவிடச் சின்னதானால் குட்டை. கை, கால் மட்டும் கழுவிக் கொள்ளலாம். இப்படி ஒவ்வொன்றிற்கும் பெயர் வைத்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள். அந்த 40 ஆயிரம் ஏரிகளில் இன்றைக்கு 20 ஆயிரம்

Koviloor Digital Library

ஏரிகள் தான் இருக்கிறது என்கிறார்கள். ஒரு காலத்தில் காரல் மார்க்ஸ் இங்கிலாந்திலிருந்து எழுதுகிறார். "இந்தியாவினுடைய சூழல் ரொம்ப இயற்கை வளம் மிகுந்ததல்ல; அவர்கள் ஏரி குளங்களையெல்லாம் உண்டாக்கி வைத்திருக்கிறார்கள். ஆனால் அவற்றை அடிக்கடி மராமத்துச் செய்ய வேண்டும். அப்போதுதான் விவசாயம் ஒழுங்காக நடக்கும். ஆனால் இங்கிலாந்திலிருந்து போன ஆங்கில அரசு அவற்றின் மேம்பாட்டிற்குச் செலவழிப்பதே இல்லை. இவர்கள் போருக்குச் செலவு செய்வதும், வரி வசூலிப்பதும், வரிப்பணத்தை தலைநகரத்திற்கு அனுப்புவதும் மட்டும்தான் அங்கிருக்கும் ஆட்சியாளர்களின் வேலையாக இருக்கிறது. ஆகையினால் அங்கு பஞ்சம் மிஞ்சி இருக்கிறது. பஞ்சம் நிலவுகிறது" என்று எழுதுகிறார்.

"அந்த வெள்ளைக்காரன் போன பிற்பாடு நாம் நம்முடைய மக்களுக்காக ஆள வேண்டுமில்லையா? இப்பவும் பணக்கார நாட்டிற்கு சம்பாதித்துக் கொடுப்பதற்காகவே நம்முடைய ஆட்சியாளர்கள் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்தப்பஞ்சம் இன்னும் தொடருகிறது. காந்தியே சொல்லி இருக்கிறார். "இந்தியாவில் ஆறு லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. இந்த ஆறு லட்சம் கிராமங்கள் வாழ்ந்தால் இந்தியா வாழ்கின்றதென்று அர்த்தம். இல்லையென்றால் இல்லை" என்றார். அப்போது இந்த ஆறு லட்சம் கிராமங்களையும் வளர விடாமல் செய்து பட்டணத்தை மட்டும் ஊதி ஊதிப் பெருக்கி இருக்கின்றோம். பட்டணமும் இன்றைக்கு நன்றாக இல்லை. எவ்வளவு நகரமாக இருந்தாலும் ஒரு சிலர் வரைதான் தாங்கும். அப்போது பட்டிக்காட்டை வறட்சியில் தொடரவிட்டு விட்டோம் என்றால் எல்லா மக்களும் சாப்பாட்டிற்காக நகரத்தில் வந்து மோதுகிறார்கள். வேலை வாய்ப்பில்லை. வீட்டு வசதியில்லை. குடிப்பதற்கு நீர் இல்லை. மருத்துவ வசதி இல்லை. குழந்தைகளுக்குப் பள்ளி வசதி இல்லை. மறுபடியும் என்ன செய்திருக்கிறார்கள். கிராமத்திலிருந்த சேரிகளுக்குப் பதிலாக பட்டணத்துச் சேரிகளை உண்டு பண்ணி இருக்கிறார்கள். ஆகவே மறுபடியும் இந்த ஆறுலட்சம் கிராமங்களையும் வாழக்கூடிய பூமியாக மாற்றினோம் என்றால், பட்டணத்தில் ஏகப்பட்ட மக்கள் நெரிசலை கிராமத்திற்குத் தள்ளிவிடலாம். அப்போது பட்டணத்தில் இருப்பவர்களுக்கும் சேர்ந்து இவர்கள் உற்பத்தி செய்வார்கள்" என்றவர் நம்மாழ்வார். இது அவரது கனவு. நடந்தே தீரவேண்டிய கனவு. அதற்கான திட்டங்களைத் தீட்டியும், இயக்கங்களைக் கட்டியும் அனைத்து இயக்கங்களோடு சேர்த்து போராடியும் வாழ்ந்த தீரர். மணப்பாறைக்கு அருகில் வானகம் என்ற சூழலியற்சோலையை அமைத்துக் க(ு)ட்டினார்.

Koviloor Digital Library

இயற்கை மீதான பேரன்பும் உடல்மீதான அக்கறையும் எந்த வயதிலும் ஒருவரை இளமை குறையாமல் வைத்திருக்கும் என்பதற்குச் சாலச் சிறந்த சான்றானவர் நம்மாழ்வார். "75 வயதிலும் எப்படி இப்படி ஒரு சுறுசுறுப்பு" எனக் கேட்டவர்க்கு, சிறுகுழந்தையாகச் சிரித்தபடி நம்மாழ்வார் சொன்ன பதில் இதுதான் : "எத்தனையோ வருசங்களுக்கு முன்னாலேயே, "உணவே மருந்து; மருந்தே உணவு"ன்னு திருமூலர் சொல்லிட்டுப் போயிட்டார். இந்த அற்புதமான வாக்கை ஆராதிக்கத் தவறியவர்கள்தான் எண் சாண் உடம்பில் எண்ண முடியாத வியாதிகளோடு அலையறாங்க. வாழ்க்கையில் இரண்டு வகை இருக்கிறது. ஒன்று நோயே வராமல் வாழ்வது. இரண்டாவது, நோய் வந்த பின் வருந்தியபடியே வாழ்வது. முதல் வகையில் இணைந்துவிட்டால், நமக்கு இன்னல்கள் இருக்காது. "மருந்து என வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி உணின்" என்ற குறளிலேயே நோய் அண்டாமல் வாழ்வதற்கான வழி சொல்லப்பட்டு இருக்கிறது. உண்ட உணவு சீரணமாகிவிட்டதை அறிந்து, அதன் பிறகு உண்டால் அந்த உடம்புக்கு மருந்து என்ற ஒன்றே தேவை இல்லை எனச் சொல்லி இருக்கிறார் வள்ளுவர். 50 வயது வரை உடம்புதான் உன்னதம் என நினைக்கும் மனது. அதற்குப் பிறகு ஆன்மாவை ஆராதிக்கிறது. ஆன்மா இந்த உடம்புக்குள்ளேதானே இருக்கிறது! அதனால், உடலைப் பராமரிப்பதும் அவசியம். இது இரண்டையும் ஒரே நேரத்தில் பராமரிக்க உதவுவதுதான் யோகா... கணியன் பூங்குன்றனார் சொன்ன "தீதும், நன்றும் பிறர் தர வாரா" என்கிற வரி நம் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஒருசேர வழிகாட்டக் கூடியது. அந்த வரிகளை மனதில் ஏற்று இயற்கையை வணங்கி, உடலை ஆராதிக்கக் கற்றுக்கொண்டால் வாழ்வின் சிறப்புக்குக் குறைவே இருக்காது!"

"வேளாண்மை தொழிலா? கலாச்சார வாழ்வியலா?, இயற்கை வேளாண்மை - பண்ணை அனுபவங்கள். இருளில் சில வெளிச்சங்கள், நச்சு வளையத்துக்குள் நமது வேளாண்மை, தாளாண்மை வேளாண்மை, ஒருங்கிணைந்த வேளாண்மை, இயற்கை விவசாய உத்திகள், கால்காணி வேளாண்மை, பேசும் பண்ணைகள், தாய் மண்ணே வணக்கம், உழவுக்கும் உண்டு வரலாறு, நெல்லைக் காப்போம், வயிற்றுக்குச் சோற்றிடல் வேண்டும், இனி விதைகளே பேராயுதம், நோயினைக் கொண்டாடுவோம், எந்நாடுடைய இயற்கையே போற்றி, பூமித்தாயே போற்றி, மரபை அழிக்கும் மரபணு மாற்று விதைகள், களை எடு ஆகியன இவர் எழுதிய நூல்கள்.

Koviloor Digital Library

இன்னும் பற்பல எழுத்தோவியங்களை இதழ்களிலும், சொல்லோவியங்களைக் காட்சி கேள்வி ஊடகங்களிலும் ஆக்கித் தந்தவர். "தமிழின வாழ்வியல் பல்கலைக்கழகம்" என்ற அமைப்பைத் தொடங்கி, தமிழ்நாட்டின் கிராமப்புறங்கள் அனைத்துக்கும் சென்று கருத்தரங்கங்களும், பயிற்சி வகுப்புகளும் நடத்தி வந்தவர். "பேரிகை" என்ற இயற்கை உழவாண்மை வாழ்வியல் மாத இதழையும் அவர் நடத்திவந்தார். மரபணு மாற்ற விதைகளுக்கு எதிராகப் போராட்டம் நடத்தியவர்.

இவ்வாறெல்லாம், நோய்க்கு இடங்கொடாது இயங்கிய நம்மாழ்வார், தாயினும் மேலதாய்க் கருதிய நாட்டிற்குவரும் கேட்டிற்கும் மருந்தளிக்கத் தொடர்ந்து பணி செய்தார். சிறிய எழுத்துக்களையும் கண்ணாடி இல்லாமல் துல்லியமாகப் படிப்பது, சோர்வே இல்லாமல் பல கிலோ மீட்டர் தூரம் நடப்பது, தோட்ட வேலை, எழுத்துப் பணி, மேடைப் பேச்சு என ஒரு நாளைக்கு 16 மணி நேரம் பம்பரமாகச் சுழன்ற நம்மாழ்வாருக்கு, இது பவளவிழா ஆண்டு. 75ஆம் ஆண்டில் அவர் அடியெடுத்து வைத்த மண், அவரை மடிமீது தாங்கிய தஞ்சை மண். அதுவே அவரைக் கடைசியாய்த் தாங்கும் மண் ஆயிற்று. நெஞ்சமெல்லாம் நிறைந்த அத்தஞ்சை மண்ணை, மீதேன் வாயு எடுக்க, "கிரேட் ஈஸ்டன் எனர்ஜி கார்பரேஷன் லிமிட்டெட்" என்ற அமெரிக்க நிறுவனம் அனுமதி பெற்றுவிட்டதறிந்து ஓடோடி வந்தார். அதனால் ஏற்படும் விளைவுகளை மக்களிடம் எடுத்துச் சொல்லித் தடுக்கக் களம் புகுந்தார்.

முதற்கட்டமாக நிலத்தடியிலுள்ள 1500 அடி ஆழத்திலுள்ள நீரை வெளியேற்றி விடுவார்கள். பின்னர் ஏற்படும் அவ்வெற்றிடத்தில் கடல்நீர் உட்புகும். நிலத்தடி நீர் உப்பானால் அங்கு விவசாயம் செய்ய முடியாது. குடிப்பதற்குக் கூட நீர் இல்லாமல் போகும். பயிர்களும் மரங்களும் கருகிப் போகும். எனவே, இத்தகு கொடிய மீத்தேன் வாயு திட்டத்தை எதிர்த்துப் போராட்டம் நடத்துவதற்காக பட்டுக்கோட்டை சென்றிருந்தபோது பிச்சினிக்காடு கிராமத்தில், திடீரென ஏற்பட்ட உடல்நலக் குறைவால் 30.12.2013 அன்று அவர் உயிர் பிரிந்தது. அவர் நிறுவிய "வானகத்தில்" அவர் உடல் புதைக்கப்பட்டதாகச் சொன்னது செய்தி. விதைக்கப்பட்டதாகக் கொள்கிறது வரலாறு.

எத்தனையோ பயிர்களை நட்ட இயற்கை விஞ்ஞானி கோ. நம்மாழ்வாரின் உயிரை நட்ட ஆண்டு, 2013. இனிவரும் ஆண்டுகளில் எண்ணில் கோடி நம்மாழ்வார்கள் இம்மண்ணில் விளைய வேண்டும் என்பதே நம் புத்தாண்டின் வேண்டுதல்.

---

Koviloor Digital Library

# திருவள்ளுவரின் கருத்தை பிரதிபலித்த கன்ஃபூசியஸ்

உலகப் பொதுமறை தந்த திருவள்ளுவரும் சீன அறிஞர் கன்ஃபூசியஸும் ஒத்த கருத்துக்களைக் கொண்டிருந்ததாக தமிழக அரசின் திருவள்ளுவர் விருது பெற்ற தைவான் நாட்டுக் கவிஞர் யூசி பெருமிதத்துடன் பேசிய ஏற்புரை.

திருக்குறளை முழுமையாகப் படித்து அதை மொழிபெயர்க்கும்போது தான் இதை அறிந்து கொண்டதாகவும் அவர் தெரிவித்தார்.

மேலும் அவர் சீனாவுக்கும் இந்தியாவுக்கும் வாழ்க்கை நெறிகள் பல பொதுவாக உள்ளன. அந்த நெறிகளில் மன்னனையும், சாதாரணக் குடிமகனையும் ஒரே நிலையில் வைத்துள்ளனர். யாரையும் பிரித்துப் பார்க்கவில்லை. திருக்குறளில் அனைத்துக் கருத்துக்களும் உள்ளன. இல்லாதது எதுவும் இல்லை.

சமுதாயத்தில் ஒரு மனிதன் பல நிலைகளில் மகனாக, தந்தையாக, கணவனாக, நண்பனாக, குடிமகனாக ஆற்ற வேண்டிய கடமைகளை திருவள்ளுவர் தனது குறள்களில் குறிப்பிட்டுள்ளார். மேலும் மன்னர், அமைச்சர், தூதர், ஒற்றர் போன்றவர்களின் தகுதி பற்றியும் திருவள்ளுவர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது சிறப்புக்குரியது.

திருவள்ளுவர் எழுதிய குறள்களில் எனக்குப் பிடித்தவை, "அற்றார் அழி பசி தீர்த்தல்...," மற்றும் "வறியார்க்கு ஒன்று ஈவதே..." ஆகிய இரண்டும் ஆகும். இந்த இரண்டு குறள்களுக்கு ஏற்ப எளியோரின் பசியைப் போக்கும் வகையில் தமிழகத்தில் நல்ல திட்டங்களை முதல்வர் ஜெயலலிதா செயல்படுத்தி வருகிறார்.

உலகளவில் எனக்குப் பல விருதுகள் கிடைத்தாலும், தமிழக அரசு அளித்த திருவள்ளுவர் விருதினை பெருமையாகக் கருதுகிறேன். திருக்குறளில் ஒரு குறிப்பிட்ட நாட்டையோ, ஆட்சியையோ, இனத்தையோ, மதத்தையோ பற்றிக் குறிப்பிடவில்லை. அதனாலேயே அது உலகப் பொதுமறை என்று அழைக்கப்படுகிறது.

திருக்குறளைப் படித்த பிறகுதான், திருவள்ளுவரும் சீன அறிஞர் கன்ஃபூசியஸும் ஒத்த கருத்துக்களைக் கொண்டுள்ளனர் என்பதை அறிந்தேன் என்றார் யூசி.

– நன்றி : தினமணி செய்தி 16.1.2014 பக்கம்-7

Koviloor Digital Library

(டிசம்பர் 13 இதழ்த் தொடர்ச்சி)

# திருத்தொண்டத் தொகை அடியார்கள்

(தமிழாகரர். தெ. முருகசாமி)

மணிவாசகர் என்றோ வாதவூரர் என்றோ சுட்டாமல் பொய்யடிமையில்லாத என்ற பொதுப்பண்பைச் சுட்டிய வகையில் சுந்தரர் குறித்த வேறோர் அடியாரைச் சுட்டிய வழி உணர்ந்தால் உண்மையறியலாம். தனியடியார் அனைவரின் பெயர்களைச் சுட்டிவரும் நிலையில் "பேயார்க்கும் அடியேன்" என்கிறார். காரைக்காலம்மை என்றோ புனிதவதியார் என்றோ இயற்பெயர் சுட்டாமல் தம்மைப் பேய் வடிவமாக்கிக்கொண்ட சிறப்பால் தம் நூலுள் பேய் எனத் தம்மைக் கூறிக் கொள்வதையே சுந்தரர் சுட்டியதுபோல் மணிவாசகரைப் பொய்யடிமையில்லாத புலவர் என்றார் எனலாம். இப்பொய்யடிமையில்லாத தனிப்பண்பை அவர்தம் திருவாசகத்தால் உணரலாம்.

பொய்யடிமையில்லாத என்ற எதிர்மறை வாசகத்தின் நேர்மொழி வாசகமானது "மெய்யடிமை" என்பதாம். உலகியல் அளவிலான பொய்ம்மைகளை அருளாளர்கள் தம்மீது ஏறிட்டுக் கூறுதல் இயல்பு என்ற வகையில் மணிவாசகர் தம்மை "யானே பொய் என்நெஞ்சும் பொய்! என் அன்பும் பொய்" என்றும் "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மைகண்டபின்" என்றும் "பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கி" என்றும் தம் பொய்யடிமைத் திறத்தை ஆங்காங்கே சுட்டியுள்ளார். மேலும் "நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து, நான் நடுவே வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்" எனத் தம்மை நடித்துவாழ் அடிமையாகக் கூறிக்கொள்கிறார். இவையாவும் மணிவாசகருக்குப் பொருந்துமா? எனில் இல்லை என்பதால் அவர் தம்மைப் பொய்யடிமையில்லாத மெய்யடிமையுள்ளவராகக் கூறாமல் கூறிக் கொள்வதால் சுந்தரர் மணிவாசகரைப் பொய்யடிமையில்லாத புலவர் என்றார் எனலாம்.

சுந்தரருக்கு முந்திய பேயாரைக் குறித்தல் தகும் ஆனால் பிந்திய மணிவாசகரை, அவர்தம் திருவாசகத்தை அறியாத நிலையில்

Koviloor Digital Library

பொய்யடிமையில்லாத என்ற தொடரால் மணிவாசகரைச் சுட்டல் என்பது பொருந்தாது எனில், திருத்தொண்டத் தொகை பாடிய போது தம் சமகாலத்தவரின் தொடர்பு இல்லாத நிலையிலேயே இருப்பதாகக் கருதிப்பாடியதை ஏற்பதுபோலப் பிந்திய மணிவாசகர் குறிப்பைக் குறித்தார் எனக் கருதல் தகும் என்க. இதனால் தொகை அடியார் கூட்டத்திலிருந்து மணிவாசகர் தனித்துணரப்பட வேண்டிய தனியடியார் எனலாம். மேலும் தொகையடியார்களாகப் பாடப்பட்டார் அனைவரும் சுந்தரருக்கு முன்னும் சமகாலத்தும் பின்னுமாக வாழ்ந்தவர்கள் ஆவார் என்பதால் பின்னர் வாழ்ந்த தொகை அடியார்களைப் போலத் தனியடியாராக ஆண்டவனோடு தொடர்புடையவர் மணிவாசகர் ஒருவரே ஆவார் எனலாம்.

ஈண்டோர் ஐயம்! சுந்தரர் அங்ஙனம் மணிவாசகரைச் சுட்டினாரெனில் சேக்கிழாரோ நம்பியாண்டார் நம்பிகளோ இவ்வுண்மையை உணர்த்தவில்லையே எனில் அதற்கான விடையை நுட்பமாக அறிந்து தெளிதல் வேண்டும். நம்பியாண்டார் நம்பிகள், சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதுபேர்களைப் பொய்யடிமையில்லாதவர்கள் என்கிறார். நக்கீரரைத் தவிர்த்த பிற புலவர்களுக்கும் ஆண்டவனுக்கும் புராணத் தொடர்பு சுட்டுவதில்லை. எனவே நம்பிகள் கூற்று சிந்தனைக்குரியதாகிறது. ஆனால் சேக்கிழார் நம்பிக்கு மாறாகக் கூறுவதாக உள்ளது.

*செய்யுள்நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்*
*மெய்யுணர்வின் பயன்இதுவே எனத்துணிந்து விளங்கி ஒளிர்*
*மையணியும் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்*
*பொய்யடிமை யில்லாத புலவர் எனப் புகழ்மிக்கார்*

சேக்கிழாரின் இப்பாடல் தொகையடியார்க்கான பண்பு நலன்களைச் சுட்டுவதினும் தனியடியார்க்கான நலன்களைத் தெளிவாகத் தெரிவிக்கின்றது. மணிவாசகரின் வாழ்வும் வாக்கும் சேக்கிழார் வழித் தெளிவாக உணரப்படுவதால் மணிவாசகரையே பொய்யடிமையில்லாதவர் எனலாம்.

சுந்தரர் பாடலிலும் சேக்கிழார் பாடலிலும் சுட்டப்படும் புலவர் என்னும் சொல் பலர் பாலைக் குறிப்பதால் ஒருவரையல்லர் எனில் ஈண்டு

Koviloor Digital Library

ரகர ஒற்று மரியாதை கருதிய பன்மையில் ஒருமையைக் குறிப்பது எனக் கருதல் வேண்டும்.

மேலும் நம்பிகள் கூறும் சங்கப் புலவர்களைத் தொயைடியார்களாகக் கருதுவதற்கும் சேக்கிழார் மெய்யுணர்வின் பயன்இதுவே என வாழ்ந்து சிவன் மலரடி சேர்ந்ததாகக் கூறும் கருத்துக்கும் முரண் உள்ளதால் சுந்தரர் கூற்றின் உட்பொருள் உணர்ந்த அளவிலேயே சேக்கிழார் கருத்து மணிவாசகரைச் சுட்டியது எனத் தெளியலாம். இதற்கான உண்மையைச் சேக்கிழார் அடுத்துப் பாடும் பாடலில்,

*பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லால்*
*சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற*
*பெற்றியினியில் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்*

என்று கூறும் குறிப்பாலும் உறுதிப்படுத்தலாம். "பொய்யடிமையில்லாத" என முன்பாடலில் குறித்தவரையே சேக்கிழார் அடுத்த பாடலில், "மெய்யடிமையுடையாராம்" எனக் குறிப்பிடுவதால் மணிவாசகரின் திருவாசகக் குறிப்பை உணர்ந்தளவில் சேக்கிழார் கூறும் பொய்யடிமையில்லாத மெய்யடிமையானவர் மணிவாசகர் என்பவரேயாம் எனலாம், அதாவது மெய்யடிமையான பொய்யடிமையில்லாதவர் என்ற கருத்து பெரும் புலவர் என்றதாலும் தெளிவாகிறது.

இங்ஙனமாயின் அப்பர், சம்பந்தர் வரலாற்றைப் போலச் சேக்கிழார் மணிவாசகர் வரலாற்றைப் பாடாததேன் என வினவலாம். திருமுறைப் பாடல்களைக் கொண்டும் பிற வழக்காறுகளைக் கொண்டும் சேக்கிழார் அனைவரது வரலாற்றைக் கூறியதுபோல மணிவாசகரால் பாடப்பட்டவை பெரும்பாலும் மதுரைத் திருவிளையாடல் தொடர்புடையனவாகவே உள்ளதால் அவை தனித்துணரப்பட வேண்டியவை என்ற கருத்தில் புராண வரலாற்றை விரிவுபடுத்தாமல் மணிவாசகரை மட்டும் பொய்யடிமையில்லாத மெய்யடிமையானவர் என்றார் எனலாம்.

மேலும் சேக்கிழார் குறிப்பிடும் எல்லா அடியார்களும் தில்லை ஈசனின் அடியார்களாகவே சுட்டப்படுவதால் மதுரையை மையப்படுத்திய

Koviloor Digital Library

மணிவாசகர் பற்றிய வரலாற்றைக் கூறல் மிகை எனக்கருதி, வரலாறு கூறுவதைத் தவிர்த்து அவரை மட்டும் பொய்யடிமையில்லாத மெய்யடியார் எனக் குறித்தார் போலும் எனலாம். இங்ஙனமெல்லாம் பல்வேறாக உணர்கையில் சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடிய சூழலாலும் பாடிக்காட்டிய சொற்குறிப்பாலும் சேக்கிழாரின் கூற்றாலும் பொய்யடிமையில்லாத புலவர் மணிவாசகராம் தனியடியாரைக் குறித்ததன்றித் தொகையாரையன்று என உறுதியாக நம்பலாம்.

அடுத்து மணிவாசகர் மூவர்க்கும் முந்தியவரா, பிந்தியவரா, என்ற உண்மையைக் கண்டறியும் வகையிலும் பொய்யடிமையில்லாத புலவர் என்பவர் சுந்தரருக்குப் பிந்திய மணிவாசகரையே குறிக்கும் எனலாம்.

மணிவாசகரை மூவர்க்கு முந்தியவர் எனக்கூறும் பலவற்றுள் அப்பர் குறிப்பிடும் நரியைப் பரியாக்கியதைச் சிறப்பாகக் குறிப்பர். இறைவன் நரியைப் பரியாகவும் பரியை நரியாகவும் ஆக்கவல்ல இயல்பினன் எனப் பொதுப்பட அவனின் இயல்பை உணர்த்த கூறப்பட்ட வாசகமாகக் கருதாமல் முன் நடந்த வரலாறாகக் கொண்டால், "பாணன் இசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்" எனக் கோளிலிப் பதிகத்தில் சம்பந்தர் சுந்தரரின் சம காலத்திய கழறிற்றறிவராம் சேரமான் பெருமாளிடம் திருமுகப்பாசுரம் கொடுத்தனுப்பி இறைவன் பாணபத்திரனுக்குப் பரிந்துரை செய்ததைக் குறித்தது முரணன்று என எண்ணத் தோன்றாதோ?

பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும் என்ற திருவாசகத்தொடர், இறைவன் திருமுகப்பாசுரத்தால் பாணபத்திரனுக்குச் சேரமானிடம் பரிசு பெறுமாறு செய்ததைக் குறிக்கிறது எனப் பள்ளியகரம் நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் திருவாசகப் பதிப்பு நூலுள் குறித்துள்ளார். இதனால் சுந்தரருக்குப் பிந்தியவர் மணிவாசகர் எனத் தெரிகிறது.

மேலும் அத்தொடர் (பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்) பண்ணமைத்துப் பாடப்பட்ட மூவர் தேவாரத்தைச் சுட்டுவதாகக் கொண்டாலும் மூவர்க்குப் பிந்தியவர் மணிவாசகர் எனலாம்.

Koviloor Digital Library

மூவர்க்கு முந்திய காலத்ததான சங்க நூல்களுள் பரிபாடலும் பதிற்றுப்பத்தும் பண் அமைதியுடன் பாடப்பட்டிருப்பினும் அவை பாடிய புலவர்களுக்குப் புராணத் தொடர்பான கதைகள் இல்லாததால் மூவர் தேவாரத்தையே பண் சுமந்த பாடல் எனலாம், ஆனால் மூவர்க்கு முந்திய காரைக்காலம்மையே இந்தளப் பண்ணில் திருவாலங்காட்டுப் பதிகம் பாடியதால் மூவர்க்கு முந்திய காரைக்காலம்மையாரின் பாடலைச் சுட்டுவதாக்க் கொண்டாலும் அம்மையாரின் பாடலை ஈசன் கேட்டுப் பரிசளித்ததாகக் குறிப்பில்லாததால் மூவர் தேவாரத்தையே குறிக்கும் எனலாம். அம்மூவர் பாடல்களையே இறைவன் ஆங்காங்கே பாடக் கேட்டு உவந்து பரிசளித்தான் என்பதால் மூவர் தேவாரப் பாடல் எனக் கொண்டாலும் அதாவது பாணபத்திரனது பாடலுடன் மூவர் பாடல் எனக் கருதினாலும் மணிவாசகர் மூவர்க்குப் பிந்தியவர் எனத் தெரிவதால் பொய்யடிமையில்லாத புலவர் என்ற சுந்தரரின் கருத்து மணிவாசகரைப் பற்றியதே என உறுதியாகக் கூறலாம். எனவே தொகையடியாராகப் பொய்யடிமையில்லாத புலவர் ஆகார் என்பதால் அவர் தனி அடியாரே ஆவார் என்பதாம்.

இவ்வாறாகத் திருத்தொண்டத் தொகையில் சுந்தரர் தனியடியார் தொகையடியார்களை இவ்வளவினர் என எண்ணிட்டுக் கூறாத நிலையில் நம்பியாண்டார் நம்பிகளே தம் விருப்பம் போல் கூறிக் கொண்டதால் அவற்றை மறு சிந்தனை செய்யுங்கால் தனியடியார்களுள் சுந்தரரின் பெற்றோரை நீக்கி, தில்லைவாழ் அந்தணராம் ஆண்டவரையும் பொய்யடிமையில்லாத புலவரையும் சேர்த்துக் கொள்ள, இயல்பான சுந்தரருடன் அறுபத்து மூவர் ஆவர். அதனால் தொகையடியார் ஒன்பதின்மர் அல்லாத எழுவர் ஆவராம் என்க.

இங்ஙனமாக ஆய்கையில் தில்லைவாழ் அந்தணர் தம் அடியாரும் பொய்யடிமையில்லாத புலவரும் தனித்தனியடியார்க்ளே என்றறியப்படுதலால் திருத்தொண்டத் தொகையில் சடையனாரையும் இசை ஞானியாரையும் நீக்கிய அளவில் தனியடியார்கள் அறுபத்திருவர். என்பதும் சுந்தரைச் சேர்க்க அறுபத்து மூவராவர் என்பதும் இதனால் தொகையடியார்கள் எழுவர் என்பதுமாக உணரலாம்.

(முற்றும்)

Koviloor Digital Library

# உலக மெய்யியலும் திருக்குறள் மெய்யியலும் – தொடர்

## 23. சித்தர் மெய்யியல் - தமிழர் மெய்யியல் பெண்மையும் தொன்மையும் போற்றல்

(தமிழாகரர்.சித்தாந்த நன்மணி. முனைவர். கா. அரங்கசாமி)

**முன்னுரை :**

பெண்தன்மை என்பது உயர்ந்த பொருள் பொதிந்தது. 'பெண்' என்றால் 'விருப்பம்' என்பது பொருள் என்பதனைப் 'பெண் என்னும் விருப்பம் வித்தி' என்னும் தொடரால் அறியலாம். எனவே பெண்தன்மை என்பது விரும்பத்தக்க தன்மைகள் என்பது பொருளாகும். ஆதலால் கொங்கு மண்ணில் நிறைந்த தாய்த்தெய்வங்கள் இடம் பெற்றன. உலகினில் 'தாய்மொழி', 'தாய்நாடு' என்ற வழக்கும் உண்டாயின. ஆதலால் தாய்மைப்பேறு என்பது வழிபடத்தக்கதாயிற்று. மேலும் பெண் என்ற சொல்லுக்கு விருப்பம், ஆற்றல், உடலாற்றல், சத்தி, தெய்வ ஆற்றல், கருணைமிக்க இரக்கம், பிறர்க்கெனவாழ்தல் போன்ற அரிய பொருட்கள் ஏற்பட்டன. எனவே பெண்மை போற்றுவதும் தொன்மை போற்றுவதும் அறிவர் நெறியாயின. தொன்மை என்பதற்குத் தொடர்ந்து வரும் பாரம்பரியச் சிந்தனைகள் என்றும், புராணம் என்றும் பொருள்கள் உள்ளன. எனவேதான் சீனப் பேரறிஞன் 'கன்பூசியசு' தொன்மை போற்றாத நாடு பெருமை பெறாது என்று கூறினான். சீனா கன்பூசியசின் வழிநின்று தொன்மை போற்றியதால் அடிமையாகவில்லை. ஆனால் தமிழ்மக்கள் 50,000 ஆண்டுப் பழமையான மொழிபெற்றும் இன்னும் அடிமையாயுள்ளனர். காரணம் தொன்மை போற்றாமையே. எனவே முன்னேறும் சமூகம் அறிவர் நெறி நின்று பெண்மையும் தொன்மையும் போற்றிக் காத்திடல் வேண்டும். இன்றேல் அழிவே பரிசாகும். அதனால் இக்கட்டுரை அறிவர்கள் எவ்வண்ணம் செவ்வண்ணமாகத் தொன்மையும் பெண்மையும் போற்றிக் 'காத்தனர்' என்பதைக் காட்டும். இது முழுமையான ஆய்வு அன்று. ஒருசில குறிப்புக்கள் மட்டுமே இங்கு இடம் பெறும் என்பதையும் அறிதல் வேண்டும்.

**பெண்மை போற்றல் :**

சிலப்பதிகாரம் பத்தினித் தெய்வத்தைப் போற்றும்,

Koviloor Digital Library

*"இவளோ, கொங்கச் செல்வி, குடமலையாட்டி,*
*தென்றமிழ்ப் பாவை, செய்த தவக்கொழுந்து,*
*ஒருமாமணியாய் உலகிற் கோங்கிய*
*திருமா மணி"* (வேட்டுவரி-48-50)

என்று புகழக் காண்க. மேலும் சிலப்பதிகாரம் பத்தினித் தெய்வத்துக்குக் கோயில் எடுத்து வழிபாடு செய்ததையும் கூறக் காண்க. திருக்குறள் 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்று கேட்டுப் 'பெண்ணிற் பெருந்தக்கது இல்' என முடிவு செய்யும். இவ்வாறு தமிழ் இலக்கியங்கள் பெண்மை போற்றும் பாங்கின. சிவன் தன் உடலில் பாதியைப் பெண்மைக்குத் தந்ததும், மற்றும் சிவனுக்குரிய வடிவம் சத்தியது என்பதும் ஈண்டு நினைக்கத்தக்கது. குறிஞ்சிப்பாட்டு,

*"சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்*
*மாசுஅறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்*
*ஆசு அறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை*
*எளிய என்னார்"* (குறிஞ்சிப் பாட்டு 13-19)

என்று கூறி மேலும் பெண்ணின் உரிமையாகிய உடன் போக்குப் பற்றியும் களவின் சிறப்பும் கூறக் காண்க. களவு என்பதற்கு விளக்கம் கூற வந்தவர்கள்,

*"தள்ளாப் பொருள் இயல்பின் தண்தமிழ் ஆய்வந்திலர்*
*கொள்ளார் இக்குன்று பயன்"* (பரிபாடல்-9)

என்னும் பகுதிக்குப் பரிமேலழகர் கூறும் உரையிலிருந்து தமிழ்மொழிக்குச் சிறப்பாய் அமைவது களவொழுக்கம் என்றும் தமிழ் என்னும் சொல் களவினைக் குறிக்கும் என்றும் அறிகின்றோம். 'என்பயக்குமோ இதுகற்க எனின் வீடுபேறு பயக்கும் என்பது' என்ற களவியல் உரைகாரர் கருத்தினைக் கபிலர்தம் பாடலால் விளக்கி இருப்பதென உணர்ந்த புலவரே இப்பாடலுக்குக் கீழே காணப்படும் விளக்கத்தைத் தந்திருக்கின்றார். எனவே தமிழறிவித்தல் என்பது வீடுபேற்றினைப் பெற நம்மவர் கையாண்ட வழிமுறைகளை அறிவித்தல் என்று பொருள் படுகின்றது. ('சாகித்ய அகடமி வெளியீடு' - கபிலர்பக்:66) அறத்தொடு நிற்கும் உரிமையும் களவு மணம் செய்யும் உரிமையும் பெற்ற சங்ககாலப் பெண்கள் உரிமை மிக்கவர்களே என்பது போதரும்.

Koviloor Digital Library

**திருமந்திரத்தில் பெண்மை :**

திருமந்திரம் திருக்குறள் வழிநின்று 'பிறர்மனை நயவாமை' பற்றிக் கூறிடக் காண்க. (244 முதல் 246 வரை) மற்றும், கரு உற்பத்தி பற்றி தாய்மைபற்றித் திருமந்திரம் பேசக் காணலாம். (1436 முதல் 474 வரை) 471ல் 'இன்புற நாடி இருவருஞ் சந்தித்து' என்று கூறிடக் காண்க. சத்தி பேதம் – திரிபுரைச் சக்கரம் பற்றி 1021 முதல் 1050 வரையிலும், வயிரவி மந்திரம் பற்றி 1051 முதல் 1100 வரையிலும், பூரண சத்தி பற்றி 1101 முதல் 1130 வரையிலும், புவனாபதிச் சக்கரம், நவாகரிச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம் பற்றியெல்லாம் பெண்மையின் ஆற்றல் பற்றித் திருமந்திரம் பேசிடக் காணலாம்.

'போகஞ் செய் சத்தி புரிகுழலாளொடும்' (1133) '*பாரித்த பெண்கள் அறுபத்து நால்வரும்*' (1060) '*புரிந்தருள் செய் கின்ற போகமா சத்தி*' (1160) என்றும் கூறியதுடன்

'*முத்துவனத்தி முகந்தொறு முக்கண்ணி*
*சத்தி சதிரி சகளி சடாதரி*' (1170) என்றும்,
'*ஆயிழை யளொடு மாதிப் பரமிடம்*' (1196) என்றும்,
'*மார்க்கங்கள் ஈன்ற மனோன்மணி, மங்கலி*' (1203) என்றும்,
'*சத்தியும் நானுஞ் சுயம்புவும்*' (1206) என்றும்;
'*பொற்கொடி மாதர் புனைகழல் ஏத்துவர்*' (1221) என்றும்;
'*அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது*' (1230) என்றும்;

கூறுவதைக் காண்க. உடலின்பம் தருவது சத்தியே என்ற திருமந்திரக் கோட்பாட்டையும் உணர்தல் நலம்.

'*ஏயுஞ் சிவ போகம் மீதன்றி யோரொளி*' (2982) என்னும் பாடலில் சிவயோகம் சத்தியின் அருள் என்பது காண்க.

மற்றும், '*புவனாபதி மிகு புண்ணியன் எந்தை*' என்னும் பகுதியில் கூட (2994) சிவன் ஆட்சிக்குட்பட்டது சத்தியின் வடிவம் எனல் காண்க. இவ்வாறு திருமந்திரம் எங்கனும் ஆற்றலை உடலின்பத்தைப் பற்றிப் பேசிடக் காண்க.

இவ்வாறு திருமந்திரம் முழுதும் உயிரினை இயக்கும் ஆற்றல் சிவம் உடலினை இயக்கும் ஆற்றல் சத்தி என்று பெண்மையின் பெருமையே பேசும். இன்றைய உலகியல் கூட அதனையே காட்டும். திருக்குறள் கூட 'பெண்வழிச் சேறல்' அதிகாரம் வைத்து ஆடவர்

Koviloor Digital Library

பெண்களுக்கு அடிமையாதல் கூடாது என்று கூறிடக் காண்க. (பலர் இந்த நுட்பம் அறியாமல் திருக்குறள் பெண்களை இழிவு படுத்துவதாகக் கருதுவர். அது அறியாமையின் விளைவு என்பதை அறிதல் நலம், திருவள்ளுவர் மிகச் சிறந்த சித்தர் நெறி நின்றவர் என்பதைக் கடவுள் வாழ்த்தே எடுத்துக் காட்டும். மற்றும் பலகுறட்பாக்கள் திருவள்ளுவர் அறிவர் நெறி நின்ற சான்றோர் என்பதை விளக்கும். எனவே திருக்குறளுக்கு அறிவர் நெறி நின்று நாம் விளக்க வேண்டும் என்பதை அறிக. பிறநெறி நிற்பார் திருக்குறளை முழுதும் உணரார் என்பதையும் அறிக. எனவேதான் இந்தத் தொடர் சித்தர் நெறி என்னும் அறிவர் நெறி பற்றிப் பல்வேறு தலைப்புக்களில் விளக்கிச் செல்கிறது.

இவ்வாறு திருமந்திரம் பெண்மையைப் போற்றி உரைத்துள்ள பகுதிகள் பலப்பல என்பதையும் நாம் அறிதல் வேண்டும். உலக இயக்கமே சத்தியின் திருவிளையாடல் என்றும், சத்தியின் வடிவமே சிவத்தின் வடிவம் என்றும் பலவிடங்களில் திருமந்திரம் கூறிடக் காணலாம். திருமந்திரம் முழுதும் பெண்மையின் பெருமையே பேசுவதை நாம் அறிதல் நலம்.

**பிற சித்தர்கள் பெண்மை தொன்மை பற்றிப் பேசுவன :**

சித்தர் பாடல்கள் என்னும் நூலின் முன்னுரையில் (பக்கம்11) பத்திரகிரியாரால் கொல்லப்பட்ட நாய் புண்ணியத்தால் காசி அரசன் மகளாகப் பிறந்தது. அவளுக்குத் திருமணம் செய்ய முற்பட அவளோ நான் பத்திரகிரியார்க்குச் சொந்தம் என்றாள். அவ்வாறு அவளை அழைத்து வந்து பத்திரகிரியாரிடம் சேர்ப்பிக்க, அவர்தம் குருவாகிய பட்டினத்தாரிடம் வேண்ட இருவரும் வீடுபேறு பெற்றனர் என்பதால் பெண்மையும் தொன்மையும் போற்றும் சித்தர் தம் கோட்பாட்டை அறியலாம். பட்டினத்தார் தம் தாயாருக்குத் தகனக்கிரியை செய்யும் போது, 'முந்தித் தவம் கிடந்து முந்நூறு நாள் அளவும்'[1] என்னும் பாடல் அவர்தம் பெண்மை போற்றும் திறம் காட்டும்.

சிவவாக்கியார்,

*'சத்திநீ தயவும்நீ தயங்குசங்கின் ஓசைநீ*
*சித்திநீ சிவனும்நீ சிவாயமாம் எழுத்துநீ'* [2] என்று

பாடும்போதும், பெண்மையே தெய்வம் என்று போற்றக் காண்க. மேலும், பத்திரகிரியார்,

*'பருவத் தலைவரொடும் புல்கிஇன்பம் கொள்வதற்குத்*
*தெரிவைப் பருவம் வந்து சிக்குவது எக்காலம்'* [3] என்றும்;

Koviloor Digital Library

சிவவாக்கியர் 'வடிவுகண்டு கொண்ட பெண்ணை' [4] என்று கூறும் போதும் மேலும் அவரே 'ஈன்ற தாயும் அப்பனும்' [5] என்று கூறும் போதும் பெண்மையின் பெருமை பேசிடக் காண்க. மற்றும் பாம்பாட்டிச் சித்தர், 'கற்புநிலை யுள்ளிற்கொண்டு எக்காலமும் வாழும் தூயநிலை' [6] பற்றிக் கூறிடக் காண்க. இடைக்காட்டுச் சித்தர் 'தாயினும் அன்பன்' [7] என்று சிவத்தைப் பாராட்டக் காண்க. அழுகணிச் சித்தர் தம் பாடலில்,

*'பைம்பொற் சிலம்பணிந்து பாடகக்கால் மேல் தூக்கிச்*
*செம்பொற் கலையுடுத்திச் சேல்விழிக்கு மையெழுதி'* [8] என்று பெண்மை போற்றக் காண்க. கொங்கண நாயனார் தம் வாலைக் கும்மியில்

*'சத்தி சடாதரி வாலைப் பெண்ணா மந்த*
*உத்தமி மேற்கும்மிப் பாட்டுரைக்க'* [9] வேண்டுவதைக் காணும்போது பெண்மையுடன் தொன்மை போற்றும் (சத்தியை மூலமுதலான தொன்மையுடன் இணைத்துக் காணும் முறை) போது சித்தர்கள் தம் தெளிவான பார்வையை உணரலாம். அவரே, 'மாதாவாய் வந்து அமுதந் தந்தாள் மனையாட்டியாய் வந்து சுகங் கொடுத்தாள்' [10] என்று கூறக் காணலாம். கணபதி தாசர் தம் நெஞ்சறிவிளக்கத்தில் 'சத்தியுஞ் சிவமாகித் தாண்டவமாடும் வாசி' [11] பற்றிக் கூறும்போதும் உண்மை நிலை காணலாம். திருமூலநாயனார் தம் ஞானத்தில் 'ஆசானும் ஈசானும் ஒன்றேயாகும் அவன் அவளும் ஒன்றாகும்' [12] என்னும் போது தொன்மையில் ஏற்பட்ட ஆற்றலைப் பெண்மையாக உருவகம் செய்வது காண்க. கருவூரார் தம் பாடலில் 'காமி வெகுகாமி சிவகாமி ரூபி' [13] என்று பாடும்போது ஆற்றலைப் பெண்மையாக உருவகஞ்செய்து போற்றக் காண்க. கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனார், 'பொங்குகின்ற காமமென்ன சிவத்தின்கூறு, பொல்லாத ஆசையென்ன மாலின் கூறு' [14] என்று கூறும்போது நாம் பல உண்மைகளைத் தெரிகின்றோம். காகபுசுண்டர் கூறும் கருத்தும் எண்ணத்தக்கது.

*'இடப்பாகம் இருந்தவளும் இவளே மூலம்*
*இருவருக்கும் நடுவான இவளே மூலம்'* [15] என்ற போதும் தொன்மையுடன் பெண்மையின் புதுவிளக்கத்தையும் நாம் பெறலாம். நிசானந்த போதம் என்ற நூலில் 'சத்தி யென்ற வடிவேதிங்கொளியாய் நிற்கும்' [16] என்னும் போது பெரிய உண்மையை இயற்கையின் நுட்பத்தை நாம் அறிகின்றோம்.

Koviloor Digital Library

இவ்வாறு சித்தர் பெருமக்கள் தொன்மையும் பெண்மையும் போற்றும் பாங்கில் உரைத்தவையாகச் சில பாடல் அடிகளைக் கண்டோம். இனி திருமந்திரம் தொன்மை போற்றும் தகையினைக் காண்போம். திருமந்திர முன்னுரையில் தொன்மைச் சிவம்பற்றிக் கூறும் செய்திகள் இங்கு எண்ணத்தக்கவை. பக்கம் 34ல் 'கந்தவார் குழலினார் பொற்கரநீர் எடுத்து வார்ப்ப' என்று கூறும் போதும் தொன்மையின் பெருமை பேசக் காண்க. மேலும் அதே முன்னுரையில் பக்கம் 35லும், 36, 37, 38, 39, 42, 43 என்ற பக்கங்களிலும் தொன்மைக்குப் புதுவிளக்கம் தருவதையும், தொன்மையின் நுட்பத்தையும் நாம் அறியலாம். இவ்வாறு திருமந்திரம் தொன்மையாகிய புராணச் செய்திகட்குப் புதுவிளக்கமும் அறிவு சார்ந்த நல்விளக்கமும் தருவதை நூல் முழுவதும் காணலாம். மற்றும் 325 முதல் 397 வரையிலும் 1106 முதல் 2067 வரையிலும் தொன்மை பற்றித் திருமந்திரம் கூறிடக் காண்க.

**முடிவுரை :**

இவ்வாறு சித்தர் பெருமக்கட்குப் பெண்மையே தெய்வம், தொன்மையே சிவம் சத்தி, ஆற்றலே யாவும் என்பது விளங்கக் காண்க. பெண்களைச் சத்தியின் அமைவாகக் கூறுவதையும் நாம் இங்குக் காணலாம். பெண்மையையும் தொன்மையையும் தெய்வ மூலமாய்ப் போற்றும் சித்தர்தம் அறிவுக் கோட்பாடு நாம் நினைந்து நினைந்து போற்றத் தக்கது.

**சான்றெண் விளக்கம்:**


1. சித்தர் பாடல்கள் (பதிப்பாசிரியர்.அரு.இராமநாதன்) பக் : 86
2. ,, ,, ப: 160
3. ,, ,, ப:124
4. ,, ,, ப:136
5. ,, ,, ப:174
6. ,, ,, ப:163
7. ,, ,, ப:212
8. ,, ,, ப:238
9. ,, ,, ப:243
10. ,, ,, ப:250
11. ,, ,, ப:291
12. ,, ,, ப:307
13. ,, ,, ப:324
14. ,, ,, ப:347
15. ,, ,, ப:399
16. ,, ,, ப:555


(தொடரும்)

Koviloor Digital Library

# கற்பனையின் உச்சம்

(தருமையாதீனப் புலவர்.வித்துவான். தா. குருசாமி தேசிகர்)

சிவப்பிரகாசர் செந்தமிழில் கற்பனையும், உவமைகளும், உருவகங்களும், உலவுவதால், "கற்பனைக் களஞ்சியம்" எனப் புகழ்பெற்றார். அவரது நூல்களில் "பிரபுலிங்கலீலை" சிற்றிலக்கியம் என்றாலும், அவர் படைத்த பாத்திரப் படைப்புகளில், கற்பனையும் கவிநயமும் உச்சமாக நிலவுகின்றன.

"மாயை" சிவப்பிரகாசர் படைத்த மாபெரும் அழகி! "மாயை" பிறந்தபின், அவளை வளர்த்த விதம் கூறும் கவியழகு, உவமையால் உச்சம் பெறுகிறது. வறியவன் ஒருவன் : அவனுக்கு இருப்பது ஒரே ஒரு நன்செய் நிலம்; அதில் அவன் பயிர் செய்தால், உரிய காலத்தில், காவல் காத்து பயிரைக் காத்துப் பயன்பெறுவான். அதுபோலவும், கல்வியில் விருப்பமுடையவன் தவறாது, நாள்தோறும் படித்து மறவாமல் கல்வி கற்பது போலவும், அரசன் குடிமக்களைச் செங்கோல் முறையில் உடல் உயிராக இருந்து காப்பது போலவும், மாயையை, அவள்தாய் போற்றி வளர்த்தாள் என்று கூறுங் கவிதையில் உவமைகள் நீதியைப் புகட்டுவன.

அக்கவிதை,

*மிடியன் ஒரு செய்யாளனச் செய்*
*விளையக் காக்கும் செயல் போலப்*
*படியில் கல்வி விரும்பினோன்*
*பாடம் போற்றும் அதுபோல*
*ஒடிவில் செங்கோல் மனுவேந்தன்*
*உலகம் புரக்கும் முறைபோலக்*
*கொடிய நோன்பு செய்தீன்ற*
*கொடியை வளர்த்தாள் மோகினியே,*

என்ற பாடலில், வறியவன் நிலத்தைப் எப்படிப் பேணவேண்டும் என்றும், கற்கும் மாணவன் பாடத்தை எப்படி போற்றவேண்டும் என்றும், அரசன் எவ்வாறு நாட்டைப் பாதுகாக்க வேண்டும் என்றும், விளக்கிய "மேம்பாடு" மை வாயிலாக உச்சம் பெறுகிறது. மோகினி மாயையின் தாய்!

Koviloor Digital Library

திருவள்ளுவர் திருக்குறளைப் பல கவிஞர்கள் கையாண்டிருந் தாலும், இவர் கவிதையில், இரண்டு குறள்கள் விளக்கம் பெறுகின்றன. மற்றொரு குறளும் மறைந்து வருகிறது.

மாயையின் குழந்தைப் பருவக் காட்சியில் "குழலினிது யாழினிது" என்ற குறளும் "சிறுகையளாவிய கூழ்" அமிழ்தினும் இனிதே என்ற குறளும் இலக்கியமாக, கவிஞர் அருளுகிறார்.

*"குழலும் யாழும் இனியவெனக்*
*கூறா வண்மை மென்கனிவாய்*
*மழலை மொழிந்தும் உடற்கின்பம்*
*மருவ ஓடி மேல்விழுந்தும்*
*விழையும் அமிழ்தின் மிக இனிமை*
*விளைய நுகரும் சுவையடிசில்*
*செழிய சிறுகை யாலளைந்தும்*
*செய்தாள் மோகம் ஈன்றாரை*

என்ற கவிதையில் "மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்" என்ற குறளும், கவிஞர் வாக்கில், "உடற்கின்பம் மருவ ஓடி மேல் விழுந்தும்" என்று பதிவு பெறுகிறது.

மாயைக்குப் பல்வகை அணிகள், அணிந்து அழகுக்கு அழகு செய்த திறத்தை, கவிஞர் வருணிக்கும் திறம் மகிழ்வைத்தரும். மாயையின், மூக்கிற்கு மூக்குத்தியும், மூக்கின் உள்ளிடத்து உள்ள, மூக்குத்தண்டின் கீழ், தொங்கும் புல்லாக்கு அணிந்தனர். அது முத்தாலாகிய புல்லாக்கு; அது தலைகீழாகத் தொங்குவது, ஆதலால், அது தொங்குவதை அடிகளார், தற்குறிப்பேற்ற அணியாக அமைத்து, ஒரு கருத்தைத் தமிழ் மக்களுக்கு அரிய விருந்தாகத் தந்துள்ளார்.

அதாவது மூக்கணி தொங்குவது; அவ்வணி முத்தாலானது. "முத்து" மாயையின் பல்லின் வெண்ணிறத்துக்கும் ஒளிக்கும், தன்மைக்கும் ஒத்த நிலையான உவமை; இவளின் பற்கள், முத்தினது குணங்களிலும், மேம்பட்டு முத்தை இகழ்கின்றன. அவ்விகழ்ச்சியைப் பெறாத முத்து, பற்களின் மேல் வருத்தங்கொண்டு, அது தன்னிகரற்று வாழ்கின்ற வாய்க்கு முன்னாகப் போய், "உன் இகழ்ச்சியை என்னாற்

Koviloor Digital Library

பொறுத்தற்கு இயலவில்லை. எனக்கு நாணத்தைத் தருகின்றது. இதோ இறந்து போகின்றேன்" எனவுரைத்து நான்று கொண்டு தூக்கிட்டுக் கொண்டு தொங்குவது போல் தோன்றும்படி, ஒருத்தி மாயைக்கு மூக்கணி இட்டாள் எனக் கவிதை தந்த, சிவப்பிரகாசர் சிந்தனை – கற்பனை – படித்து இன்புறுதற்குரியது. அப்பாடல் :-

*தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேற்பழிசார*
*மன்னி அங்கது நிகரற வாழ்மனை வாய்தன்*
*முன்னிறந்திடவேனென ஞான்று கொள்முறைமை*
*என்ன வெண்மணி மூக்கணி ஒருத்தி நின்றிட்டாள்.*

இப்பாடல் கற்பனையின் தலைமணியாகத் திகழ்வதாகும். இப்பிரபுலிங்க லீலை அரிய நுண்கருத்துக்கள் கொண்டு செறிவுடன் "எல்லாப் பொருளும் இதன்பால் உள்ளன" என்னும் கூற்றுக்கு இந்நூல் இலக்காக விளங்குகிறது.

உவமைநயத்தில் "கற்பனை மிக்கு" ஓங்கிய நிலையை மேலும் பல பாடல்களில் காணலாம். "கற்பனைக் களஞ்சியம்" என்னும், அடைமொழி, சிவப்பிரகாசர்க்கு உரியதை மேற்கண்ட கவிதைகள், மூலமாக அறிந்து இன்புறலாம். தருமையாதீன வெள்ளியம்பலவாணத் தம்பிரானின் நன்கொடை இவரது தமிழ்!

**அருஞ்சொற்பொருள் :**

| | | |
|---|---|---|
| வெண்நகை | - | வெண்பல் |
| மன்னி | - | நிலைபெற்று |
| நிகர்அற | - | ஒப்பில்லாமல் |
| வாய் | - | வாசல் |
| ஞான்றுகொள் | - | தூக்குப்போட்டுக்கொள்கிற |
| புல்லாக்கு | - | இருதுளை நடுத்தண்டில் இருமேலுதட்டில் படும்படி அணியுமோர் அணி |

---

"மக்கள் சிந்தனை"யில் வெளிவரும் கட்டுரைகள், கவிதைகள் பிற ஆக்கங்களில் இடம்பெறும் கருத்துக்களுக்கு அவற்றை எழுதியவர்களே பொறுப்பாவர்.

– ஆசிரியர்

Koviloor Digital Library

# செயலுக்கேற்ற வாழ்வும் வாழ்வுக்கேற்ற செயலும்

(தவத்திரு பொன்னம்பல அடிகளார்)

(21.12.2013 ஆம் நாள் நடைபெற்ற 145ஆம் சிந்தனை நந்தவன ஆய்வரங்கத்திற்குத் தலைமை ஏற்று ஆற்றிய சிறப்புரையின் சுருக்கம்)

“சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்”

என்னும் திருக்குறள் “செயல் என்பது அருமைப்பாடு உடையது” என்பதை நமக்கு எடுத்துக்காட்டுகிறது. பேசுவது எளிது; பேசியவாறு வாழ்க்கையில் நடைமுறைப்படுத்திக் காட்டுவது அரியதாக உள்ளது. நடைமுறைப்படுத்தாத நேரத்தில் முரண்பாடு தோன்றிவிடுகிறது. பொய்ம்மை பேசாதிருக்க வேண்டும் என்று சொல்கிறோம்; பேசாதிருக்கிறோமா? மதுப்பழக்கம் தவறு என்றும் கொடிது என்றும் சொல்கிறோம்; நமது சமுதாயம் மதுப்பழக்கத்தை விட்டொழித்திருக்கிறதா? இப்படியெல்லாம் நமது மனம் முரண்பாடுகளில் ஆழ்ந்து - அழிந்து போய்விடல் கூடாது என்று கருதித்தான் பல்வேறு வடிவங்களில் “விரதங்கள்” என்ற வாழ்வியல் முறையை நம்முடைய முன்னோர்கள் நமக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். குறிப்பிட்ட சில விரதங்களை, குறிப்பிட்ட சில காலங்களில் நாம் தொடர்ந்து மேற்கொண்டு ஒழுகிவந்தால் நம்மிடை எழுகின்ற வாழ்வியல் முரண்பாடுகள் குறைந்து குறைந்து, பின்னர் மறைந்துபோய்விடும். விரதங்கள் என்பன, நோன்புகள் என்பன நமக்கு நாமே அமைத்துக் கொள்ளும் புனிதமான கட்டுப்பாடுகளே. சில கட்டுப்பாடுகளை நமக்கு நாமே நிரல்படச் சொல்லி அமைக்கிறோம்; நடைமுறைப்படுத்துகிறோம்; நடைமுறைப்படுத்தும்போது சில சிக்கல்கள் எழுகின்றன. சிக்கல்களை எதிர்த்துப் போராடுகிறோம். இந்தப் பின்புலத்தில்தான் “சொல்லிய வண்ணம் செயலாற்றிய” அறிஞர்களை, வீரர்களை, தலைவர்களைப் பற்றிச் சிந்தித்தோம்.

“கறுப்பர் இன மக்களுக்கு விடுதலை” என்பது மாவீரர் நெல்சன் மண்டேலா பிரகடனப்படுத்திக்கொண்ட, உலகம் தழுவிய விரதம்! அதை நடைமுறைப்படுத்த அவர் களத்தில் இறங்கிய போது முரண்பாடுகள்

Koviloor Digital Library

எழுந்தன! துணிந்து போரிட்டார்; சிறைசென்றார்! ஓராண்டு, ஈராண்டு அல்ல, இருபத்தேழு ஆண்டுகள் சிறைவாசம்! அவர் சின்னஞ்சிறு மலராக இருந்த காலத்திலிருந்து, பள்ளிப்பருவத்திலிருந்து, விளையாட்டுப் பருவத்திலிருந்து எதிர்கொண்ட அவமானங்கள், சந்திக்க நேர்ந்த கொடுமை நிகழ்வுகள் அனைத்தும் ஒரு சூளுரையாக அவருக்குள் விசுவரூபம் எடுத்தன. ஏகாதிபத்திய வெள்ளை அரசிலிருந்து, ஆதிக்க சக்திகளிடமிருந்து கறுப்பர் இன மக்களை மீட்பேன்; உரிமை வாழ்க்கை பெற்றுத் தருவேன் என்று சூளுரை செய்தார்; சொன்னார்; சொல்லிய வண்ணம் செயல்புரிந்தார். இருட்டை நீக்கிப் புதிய விடியல் ஏற்பட மண்டேலா இருபத்தேழு ஆண்டுகள் சிறைக்கோட்டத்திற்குள் தவம் இருந்தார். இதுதான் செயலுக்கேற்ற வாழ்வு; வாழ்வுக்கேற்ற செயல் என்று சொல்கிறோம். மண்டேலா விடுதலை பெற்று வெளியில் வந்து மக்களைச் சந்தித்தபோது சொன்ன வாசகங்கள் முக்கியமானவை. "நான் உங்கள் ஊழியன்; உங்களிடம் வந்துள்ளேன்!" என்றார். "சிகரம் என்பது ஏதோ ஒரு குறிப்பிட்ட இடம் இல்லை; அது மேலே, மேலே, அதற்கும் மேலே இருக்கிறது. தன்மானமும் உழைப்பும் கொண்டு நாம் அந்த இடத்தை அடைய வேண்டும்; அந்தப் பயணத்தில் நான் உங்களோடு உள்ளேன்" என்றும் உரைத்தார்.

சொன்னார், சொல்லிய வண்ணமே வாழ்ந்து காட்டினார் என்பதற்கு மிகப்பெரிய சான்று நம்முடைய தலைவர் அண்ணல் மகாத்மா காந்தி ஆவார். தீண்டாமை என்னும் கொடுமைக்கு எதிராக அண்ணல் வாழ்நாள் முழுவதும் போராடினார். பூரிஜகந்நாதர் கோவிலுக்குள் போக மறுத்தார். என்னுடைய ஏழை, எளிய, தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பிரவேசம் செய்ய உரிமை இல்லாத கோவிலுக்குள் எனக்கு என்ன வேலை? நான் போகமாட்டேன்" என்று அறிவித்தார். "நான் எந்த நிலையில் இருந்தாலும், ஏன், இந்திய வைஸ்ராய் பதவி வகிக்க நேர்ந்தாலும், நான் துப்புரவுப் பணியை மேற்கொள்வேன்" என்று மகிழ்ச்சியோடு சொன்னார். நம்முடைய பெருந்தலைவர்களான காமராசர், ராஜாஜி, சாஸ்திரி போன்றவர்கள் சொன்னார்கள், சொல்லிய வண்ணமே வாழ்ந்து காட்டிச் சென்றார்கள். விருதுநகரில் தன் தாயார் வசித்த வீட்டுக்கு, ஓர் அதிகாரி எந்த முறையான விதிமுறைகளும் இல்லாமல், முதல் அமைச்சரின் தாயாரின் வீடு என்ற ஒரே

Koviloor Digital Library

காரணத்துக்காக தண்ணீர்க் குழாய்க்கான ஏற்பாடுகளைச் செய்தபோது காமராசர் கோபித்துக்கொண்டார்; முறையில்லாத குழாய் ஏற்பாட்டை நீக்கச் சொல்லிவிட்டார். "நாம் எல்லோரும் நாட்டுக்கு வேலை செய்ய வந்திருக்கிறோம்; வீட்டுக்கு வேலை செய்ய வந்தவர்கள் அல்ல" என்று அந்த அதிகாரிக்கு எச்சரிக்கை விடுத்தார். மேற்கு வங்கத்தில் பதவியில் இருந்த போது ராஜாஜிக்கு மதிப்பு மிகுந்த பரிசுப் பொருள்கள் ஏராளம் வந்தன. ராஜாஜி அவற்றை எடுத்துக்கொள்ளவில்லை. அப்படியே அரசுக்கு கொடுத்துவிட்டார். குளிர்மிகுந்த ரஷ்யாவில் இருந்தபோதுகூட லால்பகதூர் கூடுதலாக ஒரு கம்பெளி ஆடை பெற்றுக்கொள்ள மறுத்தார்; பதவியிலிருந்து விலக நேர்ந்து, வீடு திரும்பும்போது அரசாங்கக் கார்ப்பயணம் வேண்டாம் என்று சொல்லிவிட்டு நடந்தே சென்றார். இத்தகைய சான்றோர் பெருந்தகையோரின் வாழ்க்கையை எப்படிச் சொல்வது? **"அவர்களுடைய ஆன்மா எப்போதும் உண்மையை, சத்தியத்தைத் தாங்கிப் பிடித்துக்கொண்டே இருந்தது"** என்றுதான் மனம் நெகிழச் சொல்ல வேண்டும். இன்னும் வேறு ஒரு மொழியில் சொல்வதானால் "செயலுக்கு ஏற்ப வாழ்ந்தவர்கள்; வாழ்வுக்கு ஏற்பச் செயல்பட்டார்கள்; ஏன், எப்படி என்றால் அவர்களது வாழ்க்கை வாழ்வாங்கு வாழ்ந்த வாழ்க்கை" என்றுதான் சொல்லவேண்டும்.

– கட்டுரையாக்கம் நமது செய்தியாளர் "மூமு"

*"இந்தியா பல்வேறு மொழிகள், சமயங்கள் நிலவும் நாடு. அதனால் மொழி, சமயம் ஆகியவைகளை நாட்டின் ஒருமைப்பாடு என்ற ஆதார சுருதியோடு இணைத்தே காணவேண்டும்; பேசவேண்டும்; எழுத வேண்டும். இந்தக் கட்டுப்பாட்டினை ஒவ்வொரு இந்தியனும் ஒழுக்கமாக ஏற்றுக் கொள்ளவேண்டும். இந்தியத் திருநாட்டில் சீக்கியர்கள், பஞ்சாபிகள், வங்காளிகள், தமிழர்கள் ஆகியோர் மொழி உணர்வில் மூத்தோர் இவர்களிடம் தன்னடக்கம் தேவை. அதேபோழ்து பொறுத்தாற்றும் பண்பு இழப்புக்கே துணை செய்யும் என்ற மணிமொழி உண்மையாகிவிடக் கூடாது. இதில் நடுவண் அரசுக்கு கவனமும் கருத்தும் வேண்டும்"*

– அருள்நெறித்தந்தை

*மக்கள் சிந்தனை தலையங்கம் 8/1984*

Koviloor Digital Library

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# பூவும் நாரும் – 23

(சாமி. தியாகராசன்)

## சில நிகழ்ச்சிகள் – சில செய்திகள்

**செய்திகள்**

1. என் மகள் திருமதி வானதி முருகவேல் இந்தியில் எம்.ஏ; பட்டம் பெற்றவர். அதற்குக் காரணம் சாமியே! இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடத்தியவர் என்று வழக்குத் தொடரப்பட்டு நீதிமன்றத்தில் அபராதம் விதிக்கப்பெற்றவர் சாமி. பின்னர் அண்ணா ஆட்சிப் பொறுப்புக்கு வந்த பின்பு சாமி மீதிருந்த அந்த வழக்கு நடவடிக்கைத் திரும்பப் பெறப்பெற்று, அபராதத் தொகையும் திருப்பித்தரப்பட்டது. அந்தச் சாமிதான் என்னிடம் நம்பிள்ளைகள் இந்தி படிக்காமல் இருப்பது நல்லதன்று. அந்த மொழியைக் கற்காமல் விட்டுவிட்டால் நம் பிள்ளைகள் வாழ்க்கைப் பாதையில் மிகவும் பின்தங்கிவிடுவார்கள். ஆதலால் இந்தி படிக்க வைக்கவேண்டும் என்றார்கள். அவர்கள் எண்ணத்தை என் மகளை இந்தி படிக்க வைத்ததின் வழி நிறைவேற்றினேன். அண்மையில் என் மகளுடன் வடநாட்டுப் பயணம் மேற்கொண்டபோது இந்தி எந்த அளவுக்குப் பயன்பட்டது என்பதை நேரில் அனுபவித்தேன்.
2. கலைக்கல்லூரிகள் அனைத்துப் பாடங்களும் தமிழ் வழியிலேயே நடத்தப்படும் எனக் கலைஞர் அரசாணைப் பிறப்பித்தார். தலைவர் ம.பொ.சி. அவர்களும், சாமி அவர்களும் கலைஞரின் அந்த நடவடிக்கைக்கு முக்கியக் காரணிகளாக இருந்தனர். இந்த மாற்றத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்து ஒரு பிரிவினர் போராட்டம் நடத்தினர். போராட்டத்தின் காரணமாக மாணவர்கள் தமிழ் வழியிலும் படிக்கலாம், ஆங்கில வழியிலும் படிக்கலாம் எனக் கலைஞர் அதில் மாற்றம் செய்து ஆணை பிறப்பித்தார். இது பற்றிச் சாமி என்னிடம் “இதற்காகவா இவ்வளவு காலம் பாடுபட்டோம், ஒரு மாற்றத்தைக் கொண்டுவரும் போது எதிர்ப்பு வருவது இயற்கைதானே! அந்த எதிர்ப்பில் நியாயமில்லை எனப் பல தளங்களிலும் நின்று முறியடிக்காமல் உடனே அதனை மாற்றிவிட்டாரே! இந்தி எதிர்ப்புப் போராட்டத்தால் காங்கிரஸ் அரசு வீழ்ந்ததை அவர் கவனத்தில் கொண்டுவிட்டார் போலும். என்னிடம் இதுபற்றிக் கேட்கவில்லை” எனச் சொல் வருத்தப்பட்டார்கள்.
3. சாமிக்கும் கலைஞருக்கும் ஊடல் இருந்த காலம். சகோதரர் எஸ்.கே. அவர் மகள் திருமணத்தில் கலைஞர் தலைமையில் மணமக்களை

Koviloor Digital Library

வாழ்த்திப் பேசும் வரிசையில் சாமியையும் சேர்த்துக் கலைஞரிடம் ஒப்புதல் பெற அதனைக் கலைஞரிடம் காட்டியுள்ளார்.

என்னய்யா! அடிகளார் பெயரைச் சேர்த்திருக்கிறாய்! எனக் கலைஞர் கேட்க, நீண்ட காலப் பழக்கம் விட்டுவிட முடியாது, அவர்களையும் வாழ்த்துரைக்கு அழைக்க ஆசைப்படுகிறேன் என எஸ்.கே சொல்ல சரி! போட்டுக் கொள், அப்படியே மதுரை ஆதீனத்தின் பெயரையும் சேர்த்துக்கொள் என்றாராம் கலைஞர். (இந்தச் செய்தி எஸ்.கே. என்னிடம் சொல்லியது)

எஸ்.கே. மகள் திருமணத்திற்குச் சாமி வந்தார்கள். அவர்களுடன் நானும் சென்றிருந்தேன். கலைஞரும் சாமியும் கலந்து பழகினார்கள். ஊடல் தீர்க்கும் வாயிலாக எஸ்.கே. இருந்து செயல்பட்டார். அந்தத் திருமணத்தில் சாமியும், மதுரை ஆதீனமும் வாழ்த்திப் பேசிய பேச்சுகளைப் பற்றிக் குறிப்பிட்ட கலைஞர், இங்கே ஒரு பட்டிமன்றம் நடந்தது என்றார்.

4. ரஷ்யாவுக்குச் சென்று வந்த பின்பு நாங்கள் பேசிக்கொண்டிருந்தபோது, ரஷ்யாவில் ஆண், பெண் அனைவரின் கைவிரல்கள் மெலிந்து காணப்படவில்லை. மாறாகத் தடித்தே இருக்கின்றன ஏன்? என்றார்கள். நான் என்ன பதில் சொல்ல முடியும்? வாளா இருந்தேன். அங்கே அனைவரும் உழைக்காமல் எட்டு மணி நேரம் எப்போது முடியும் என்பதிலேயே கவனம் செலுத்துகின்றனர். உழைக்காததால் விரல்கள் மெலியவில்லை. மாறாக இருக்கின்றன. அதனால் ரஷ்யாவின் பொருளாதாரம் தேய்ந்து வருகிறது. சோஷலிச ஆட்சியின் இந்தக் குறைபாடு களையப்படாவிட்டால் ரஷ்யா கீழேபோகும் என்று அவர்கள் கேட்ட கேள்விக்கு அவர்களே பதில் சொன்னார்கள்.

5. சாமி தமது வாழ்நாளில் இறுதியாகச் சென்று வந்தது சவுதி அரேபியா. அங்குச் சென்ற சில நாட்களிலேயே திரும்பிவிட்டார்கள். அந்தப் பயணம் பற்றி என்னிடம் “நம்மவர்கள் சவுதி சென்று சிலகாலம் தங்கிவிட்டுத் திரும்பி வந்தால் உடனே ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தில் சேரவேண்டும் என்ற எண்ணம் அவர்கட்கு உண்டாகும்” என்றார்கள்.

6. திருவருள் பேரவை, திருக்குறள் பேரவை ஆகியவற்றின் செயல்பாடுகள் ஏறக்குறைய ஒன்றாகவே உள்ளன. இவற்றை இணைத்து ஒரே பெயரில் செயல்பட்டால் மடத்திற்குச் செலவும் குறையும், சாமிக்குச் சிரமமும் குறையும் என ஒரு சமயம் கூறினேன்.

“என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள், திருவருள் பேரவை கடவுள் நம்பிக்கையுடன், சமய உணர்வுடையவர்கள் அங்கம் வகிப்பது. திருக்குறள் பேரவை அப்படிப்பட்டதன்றே! அங்கே கடவுள் நம்பிக்கையும்,

Koviloor Digital Library

சமயச் சார்பற்றவர்களும் வருவார்களே! அவர்களை நோக்கித்தானே அந்தப் பேரவையை நடத்தி வருகிறோம். வேலூர் மாநாட்டில் இடஒதுக்கீடு பற்றித் தீர்மானம் நிறைவேற்றியுள்ளோம். நல்ல தீர்வு சொல்கின்ற தீர்மானம் அது. அது போன்றவற்றைத் திருவருள் பேரவையில் கொண்டுவந்து பேசமுடியாதே" என்றார்கள்.

7. அண்ணாவின் கூர்த்த மதிக்குச் சான்றாக ஒன்றை அடிக்கடிக் கூறுவார்கள். சென்னையில் நடந்த இரண்டாவது உலகத் தமிழ்மாநாட்டு நினைவாகச் சென்னைக் கடற்கரையில் சான்றோர்களுக்குச் சிலை வைப்பது என்று முடிவாகியிருக்கிறது எனக் கேள்விப்பட்டு அண்ணாவைச் சந்தித்தேன். அந்தச் சந்திப்பில் அப்பரடிகளுக்குச் சிலைவைக்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டேன்.

"அடிகளாரே இப்படிக் கேட்கலாமா? நாம் கடற்கரையில் வைப்பது சிலை. சிலை வழிபாட்டிற்குரியதன்று. அப்பரடிகள் வழிபாட்டிற்குரியவர். வழிபாட்டிற்குரிய அந்தச் சிலையைப் படிமம் அல்லது திருமேனி என்றுதானே சொல்வார்கள். அது சரியாகுமா?" என அண்ணா கேட்டார்கள். நான் அசந்துபோனேன் எனச் சொல்வார்கள். இதனைத் தாம் எழுதிய தன்வரலாற்றிலும் பதிவு செய்துள்ளார்கள்.

8. "மரபு என்றால் என்ன? நீண்ட நெடிய காலமாகப் பின்பற்றி வரும் பழக்க வழக்கங்கள், பேச்சு முறைகள், வாழ்க்கை நடைமுறைகள் ஆகியவற்றை மரபு என்கிறோம். காலப் போக்கில் ஏற்படும் அகப்புற மாற்றங்களினால் மரபுகள் மாறும். அந்த மாற்றங்களே புதிய மரபுகளாகச் சிலகாலம் பின்பற்றப்படும். சில அடிப்படையில் மாறாமலே இருக்கும். இந்த மாற்றங்களுக்கு ஈடுகொடுக்காமல் நாம் இருந்துவிட்டால் வளர்ச்சியை நாம் மறுதலித்தவர்களாவோம். ஆதலால் மாற்றங்களை நமக்குத் தக்கவாறு ஏற்றுக்கொண்டால்தான் வளர்ச்சியடைய முடியும்.

நாம் இப்போது தருமபுரத்திற்குக் காரில் போகிறோம். பல்லக்கில் செல்வதுதான் மரபு எனச் சொல்லமுடியுமா? அதில் உங்களையும் ஏற்றிச் செல்லமுடியுமா? அல்லது நடந்துதான் செல்லமுடியுமா? கார் இருக்கிறது. அதனைப் பயன்படுத்துகிறோம். இதனைத்தான் வள்ளுவர் "எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு – அவ்வது உறைவது அறிவு" என்கிறார்.

இப்போது என் பக்கத்தில் உட்கார்ந்து வருகிறீர்கள். நம்மவர்களில் சிலர் இதனை மரபு மீறல் என்பார்கள். உங்களிடம் பேசவேண்டியவற்றைப் பேச இந்தக் கார்ப்பயணத்தைப் பயன்படுத்துகிறேன். நீங்கள் தருமபுரம் வந்து அங்கே பேசமுடியாது. நான் குடந்தை வந்து தங்கிப் பேசமுடியாது. இதனை மரபு மீறுதல் என்று சொல்வது சரியாகுமா? சிலர் சொல்லலாம். அதுபற்றி நாம் கவலைப்படக்கூடாது" என்றார்கள்.

-(தொடரும்)

Koviloor Digital Library

உ

குன்றக்குடி

# அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா

நிகழும் விஜய ஆண்டு பங்குனி மாதம் 5ம் நாள் (19.3.2014) புதன்கிழமையன்று காலை 9.30 மணிக்கு மேல் 10.30 மணிக்குள் மிகச்சிறப்பாக நடைபெறவிருக்கிறது.

## நிகழ்ச்சி முறை

| தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி | கிழமை | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|---|
| பங்குனி 2 | 16.3.2014 | ஞாயிறு | மாலை 6.30 மணி | முதற்கால யாகபூசை தொடக்கம் |
| | | | இரவு 9.00 மணி | பூரணாகுதி, தீபாராதனைகள் |
| 3 | 17.3.2014 | திங்கள் | காலை 9.15 மணி | இரண்டாம்கால யாகபூசை |
| | | | பகல் 11.30 மணி | பூரணாகுதி, தீபாராதனைகள் |
| | | | மாலை 6.00 மணி | மூன்றாம் கால யாகபூசை |
| | | | இரவு 8.30மணி | பூரணாகுதி, தீபாராதனைகள் |
| 4 | 18.3.2014 | செவ்வாய் | காலை 9.00 மணி | நான்காம் கால யாகபூசை |
| | | | பகல் 11.00 மணி | பூரணாகுதி, தீபாராதனைகள் |
| | | | மாலை 6.00 மணி | ஐந்தாம்கால யாகபூசை |
| | | | இரவு 8.00 மணி | பூரணாகுதி தீபாராதனைகள் |
| 5 | 19.3.2014 | புதன் | காலை 5.00 மணி | ஆறாம்கால யாகபூசை |
| | | | காலை 7.00 மணி | பூரணாகுதி, தீபாராதனைகள் |
| | | | காலை 7.25 மணி | கடம் புறப்பாடு |
| | | | காலை 9.30 மணி | விமானத் திருக்குடநன்னீராட்டு |
| | | | காலை 10.00 மணி | மூலவர் திருக்குடநன்னீராட்டு |
| | | | மாலை 5.00 மணி | மகாபிஷேகம் |
| | | | | திருக்கல்யாணம் |

மெய்யன்பர்கள் வருகை தந்து குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்குட நன்னீராட்டுவிழாப் பொலிவு கண்டு திருவருள் பெறுக.

*அன்பர்கள் அனைவரும் வருக! ஆறுமுகன் திருவருள் பெறுக!*

Koviloor Digital Library

# நயம்பாடி, உலகத் திருக்குறள் பேரவை
# 34ஆம் ஆண்டு ஐம்பெரும்விழா

விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், நயம்பாடியில் திருவள்ளுவராண்டு 2045 தை முதல் நாள் (14.1.2014) அன்று 34ஆம் ஆண்டு ஐம்பெரும்விழா சிறப்பாக நிகழ்ந்தது. திரு.கி.கோ.சடகோபன் அவர்கள் தலைமை வகித்தார். நீதிபதி. பா. ஜெயபாலன் அவர்கள் திருவள்ளுவர் திருவுருவப்படம் திறந்து வைத்தார். நயம்பு அறிவுடைநம்பி அவர்கள் எழுதிய "திருக்குறள் சிந்தனைத் துளிகள்" என்ற நூலை ஸ்ரீலெட்சுமி சேன பட்டாரக பட்டாசாரிய வரிய சுவாமிகள் வெளியிட்டார். டாக்டர்.கோ. அண்ணாமலை அவர்களும், திரு. வி.பி.என்.கோபிநாத் அவர்களும் நூல்படிகள் பெற்றனர். திரு.முனைவர்.கோ.பெரியண்ணன் அவர்களும் புலவர் செ. வாசுகி அவர்களும் நூல் திறனாய்வுரையாற்றினர்.

அடுத்து, தமிழக அரசின் நல்லாசிரியர் விருது பெற்றமைக்காக இராம. தண்டபாணி அவர்களுக்குப் பாராட்டுவிழா நடைபெற்றது. பா.செந்தமிழ்ச்செல்வன் அவர்கள், வெ. கண்ணன் அவர்கள் திருமதி.இலட்சுமிசேகர் அவர்கள் பெ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

பின்னர், பரிசளிப்பு விழா நிகழ்ந்தது. திருக்குறள் போட்டி, திருப்பாவைப் போட்டி, விளையாட்டுப் போட்டி ஆகியவற்றில் வெற்றிபெற்றவர்களுக்கு முறையே டாக்டர்.அ.சுகன்யா பாவேந்தன் அவர்கள், துரை. புண்ணியகோட்டி அவர்கள், க. வச்சிரவேலு அவர்கள், க. குப்புசாமி அவர்கள், ஜெ. குமரவேல் அவர்கள், கி. இராசேந்திரன் அவர்கள் ஜெ. விஜய் அவர்கள், மா. சக்கரவர்த்தி அவர்கள், திருமதி.தமயந்தி பாபு அவர்கள் ஆகியோர் வழங்கிச் சிறப்பித்தனர்.

டாக்டர்.அ. பாவேந்தன் அவர்கள் நினைவு திருக்குறள் அறக்கட்டளையிலிருந்து ஆண்டுதோறும் திருக்குறள் போட்டிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டுவருவதும், விழா இறுதியில் பள்ளியில் பயிலும் நயம்பாடி (ரெ) மாணவ, மாணவியர் அனைவருக்கும் நயம்பாடி நல்லாசிரியர் ஒருவர் நினைவாக ரூ.30 மதிப்புள்ள திருக்குறள் புத்தகம் அன்பளிப்பாக வழங்கப்பட்டு வருவதும் M. அறிவுடைநம்பி திருக்குறள் அறக்கட்டளையிலிருந்து பொதுத் தேர்வில் வகுப்பு வாரியாக மூவர்க்கு பரிசளித்து வருவதும் குறிப்பிடத்தக்கது.

14.1.2014 காலை 10 மணிக்குத் திருக்குறள் முற்றோதலும் மாலை 4 மணிக்கு திருவள்ளுவர் திருத்தேர் ஊர்வலமும் நிகழ்ந்தன.

---

Koviloor Digital Library

# குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்!

(கவிஞர். கா. கருப்பையா)

உயிர் நாரில் அவர் தொடுத்த மலர் மாலை
ஊரெல்லாம் ஒன்று சேர்ந்து மணம்பரப்பி
உள்ளத்தின் உணர்வுகளில் நெகிழ்வூட்டி
உலகிற்கு அவர் முகத்தைக் காட்டியதே!

சிறியதொரு வட்டத்தை விட்டு விட்டு
பெரிய தான வட்டமாம் இப்பூவுலகில்
துறவறத்தை மேற்கொண்ட துணிச்சலுக்கு
ஈடு இணை காட்டிவிட ஏது வழி?

துறவு கொண்ட தன் மகனைக் காண்பதற்கு
துடித்து வந்த அன்புத்தாய் அந்த நாளில்
திருமடத்தில் அவரைக் கண்டு மனம் வெதும்பி
திகைத்துப் போய் நின்றுவிட்டார் கற்சிலையாய்

உறவுகட்கு அப்பாலே என் பயணம்
ஒரு காவி உடை மூலம் தொடரும் என்று
ஈன்றெடுத்த அன்னையிடம் கூறியது
இவ்வுலக வரலாற்றில் புதுமை தானே!

ஐம்பதிலே பயணிக்கும் அருள்ஜோதி
அனுபவித்த துறவு வாழ்க்கை இருபதாண்டு
செய்து வரும் பொதுப்பணியோ ஏராளம்
செயல்பாட்டு முறைகளுமே தாராளம்!

மக்களது சேவையிலே மகிழ்வு கொண்டார்
மனங்களிலே மகிழ்ச்சியூட்டும் பணியை ஏற்றார்
இலக்கியத்தின் பணிகளிலே இன்பம் கண்டார்
இறைவனையும் அதிலேதான் இணைத்து வைத்தார்!

ஆன்மீக உரைகளிலே பொருளை வைத்தார்
அடுக்குச் சொல் மொழிகளிலே எடுத்துரைத்தார்
அப்பர் சொன்ன கருத்துக்கள் அனைத்தையுமே
அடிபிறழா வகையினிலே வழிமொழிந்தார்!

Koviloor Digital Library

அன்னையவள் மறைவுச் செய்தி கேட்டதுமே
அதிர்ச்சியின்றி தளர்ச்சியின்றி அமைதியாக
அன்றாடம் செய்து வந்த பொதுப் பணியை
அட்டியின்றி பொறுமையாகச் செய்து வந்தார்!

இளமையிலே நாம் அடையும் இன்ப துன்பம்
இறைவனது சேவையிலே ஈடுகட்டும்
என்று அவர் கூறிவரும் அறிவுரையை
என்றென்றும் கடைப்பிடித்தல் நம் கடமை!

குருமகா சன்னிதானப் பாதையிலே
நெறிமாறாச் சீடராகப் பயணம் செய்யும்
மாமதுரை கண்டெடுத்த மாணிக்கமே
மகத்தான பணிகள் செய்யும் அடிகளாரே

நூறாண்டு வாழ்ந்தாலும் போதாது பூவுலகில்
ஆயிரத்தில் அகவைகளை எண்ண வேண்டும்
ஆண்டவனை அவர் வடிவில் காண வேண்டும்
அனுதினமும் அவர் நெறியில் வாழ வேண்டும்.

---

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

Koviloor Digital Library

# தவ ஞானம் தடுத்தாலும் உள்ளுக்குள் எரியும் உயிர் தீ...

(கவிஞர். மார்ஷல் முருகன்)

| | | | |
|---|---|---|---|
| உண்டான | உறவுகள் | துண்டானபின், | தானே துறவு |
| கொண்டாடி | ஊர் மகிழ | தானே பின்வரும் | புகழ் உறவு |
| சென்றேனும், | மனிதகுலம், | ஒன்றாகவைத்துப் | புதுமைத் துறவு |
| மன்றாடும் | மானுடத்தை | கொண்டாடிக் | காத்தபுரட்சித்துறவு |
| என்றென்றும் | சமத்துவத்தைப் | போதிக்க | தலைநிமிர்த்த உறவு |
| நுன்றாம்நடும் | குன்றக்குடிஅடிகள் | தமிழ்நிலத் | (துக்) உறவு, |
| வெண்தாடி பெரியார் | முத்தமிழ்க்கலைஞர் | கரம்குவித்த | காஷாயத் துறவு |
| விரைந்தோடி தமிழ் | "கலைகற்" நீக்கிச் | சேர்ந்ததோ | பலகோடி உறவு |
| முத்தமிழ் முழக்கம் | தினம் தினம் படைக்கும் | பெரியமகாகுரு | சந்நிதானம் |
| வித்தகப்பார்வை | விளைந்ததொரு | வீரியமாய் இளையகுரு | சந்நிதானம் |
| நித்திய சேவையில் | சத்தியப்பேரொளி | ஆதீனப்பேரரசு | ஆனதொரு பொற்காலம் |
| சித்தமெல்லாம் | தவத்திருவடியைத் | தொழக் கிடைத்தபேறு | சண்முக வேலுவிற்காம் |
| எழுந்திரு | சண்முகவேல் | எழுந்திரு சண்முகவேல் | இருமுறை ஆசி அவருக்காம் |
| அதனால்தான் | மண்ணில்பட்ட | சண்முகவேல் பட்டாடை | பாடுபொருளானதுவாம் |
| இளையகுருவின் | இன்முறுகாட்சிகண்டு | தடையில்லா தரிசனம் | சண்முகவேல்பெற்றார் |
| "பூர்வாசிரமத்தாய் தங்கை" | புலம்பிஅழுதபோது, | தாயின் தவிப்பில் | தளராத பேருள்ளம் |
| ஊர் ஆசி பெறத்தான், | உன் கை உயர்ந்தெழ, | வேண்டுமென்ற | குருவின் கட்டளை "சார்புள்ளம்" |
| மகாகுரு திருவுள்ளம், | புன்னகை நிலையில் எழ, | மீண்டும் வென்று உயிர் | விழித்த திருவுள்ளம் |
| தாயின் தவிப்பு, | தங்க மகன், ஆடைகள் | மடிப்புக் கலையாமல் | மனதைக் கலக்கியதாம் |
| உடுத்திக் களைத்த | ஒவ்வொரு ஆடைக்குள்ளும் | மகனின் மணம் வீச | மனதில் அலைமோதியதாம் |
| ஒவ்வொரு நாளும் | தாயுள்ளம் மணம் வீசும் | மகனின் ஆடையுடன், | மனம் பேச அலைவீசியதாம் |
| வெவ்வேறு செய்திகள், | தவறாது, வந்து காதோடு பேச, | காஷாய ஆடையுடன் | மகன், கண்களில் ஈரம் கசிந்ததாம் |
| மகாசந்நிதானம் | "பரிபூரணமானார்கள்" | குருமகாசந்நிதானம் | கட்டளைவேள்வியில் |
| கேட்டது அசரீரி | "உலகம் பெரியது" | "சிறிய வட்டத்தை விட்டுவிடு" | கேட்டலில் ஞானம் |
| பறம்புமலையில் | 08-07-2002 | பள்ளிவிழாவில் | தீயாக வந்த செய்தி..தீ..? |
| அன்று உயிர் நாளில் | முடிச்சு அவிழ்ந்த செய்தியால், | அதிர்ந்த இதத்தை | அறமனமே காத்ததாம் |
| இன்றும் எங்கள் | காதுகளில் சுடுகிறதே | அறம் பேணும் | கல்வி விழா தள்ளிவைக்க |
| தாய்ப்பால் குடித்த | உணர்வை விட, தமிழ்ப்பால் தந்த, குருமகாசந்நிதானம் | | தவ வலிமை முன்வந்ததாம் |
| சேய்பணி தொடர | தாய்பணம் முடிய | வர மாட்டேன் என்ற | "வார்த்தை அறமாய் வென்றதம்மா" |

Koviloor Digital Library

தவஞானம் தந்தாலும்
மாமணியைச் சுமந்த
யார் வந்து மன
ஊர் அழுது துடிக்க,
எங்கள் கண்களிலும்
தவமிருந்து பெற்ற
காணத் துடித்திருக்கும்
தாய் அழுத கண்ணீர்
கண்களில்
நாங்கள்
குருமகா சந்நிதானம்
குருவருளும்
வணங்கி

உள்ளுக்குள் எரியும்
தாய் வயிற்றில்
நெருப்பணைப்பார்
உறவுகள் கூடி,
ஈரம் இன்று வரை
மகன் "தவத்திரு"
கவலை வேர்
வழிந்த சுவடுகள் எங்கள்
பதிந்திருக்கும்
பணிந்திருக்கும்
பொற்பாதம்
திருவருளும்
மகிழ்வோம்

உயிர்த்தீயை
நெருப்பிட்ட
இயற்கையின் நிய "தீ"
ஓடிவந்து கூடி அழ
தேடிவந்து சேர
"குருவான" மகிமை
பிடித்திருக்கும்
இளைய மகாகுரு
கருணை அன்பு
பொருளுக்கேற்ற
வணங்கிடுவோம்!
எப்போதும்
வாழ்வில்

யார் அணைப்பார்!
ஊரே அழுதிருக்கும்
இயலாமைக்கு வந்த "தீ"
காட்சிகள் கண்ணில்
தினமும் அழுகின்றோம்
தெரிந்தாலும் தாயுள்ளம்
உயிர் வேர் பிரிந்த உள்ளம்
கண்களில் பதிந்ததுவோ...
நிறைந்திருக்கும்
அருள்கொடுக்கும்
வணங்கிடுவோம்!
பெற்றிடுவோம்
எழுவோம்.

---

பொருள் பொதிந்த வழிகாட்டும்
திருவடி வாழ்க! வணக்கம்
கார்த்திகை மாத "மக்கள் சிந்தனை"
தலையங்கத் திருமுகம்
எடுத்துக் காட்டுகளோடு
"பசுமட்கலப் பொருளாக்கம்"
செய்வார்க்குச் சாட்டையடி யாகும்?
பழமைக்குப் புதுமைக் கட்டியம்
படைக்கும் எழுத்தாற்றல்
மேலும் தொடரப் பிரார்த்தனை!

**– தா. குருசாமித் தேசிகர்**

எந்தச்செயலையும் செய்து முடித்தற்கு அரியது என்று கருதித் தளர்ச்சி அடையக் கூடாது. அச்செயலை முடித்தற்கு உரிய முயற்சி பெருமையைத்தரும்.

**-அருள்நெறித்தந்தை**

கோபத்தைக் கொன்றுவிடு. இல்லையேல் அது
உன்னைக் கொன்றுவிடும் **-குருநானக்**

Koviloor Digital Library

# சிந்தனை வட்டம்

மனிதநேய மண்டேலாவை ஒரு மடலாய மாத இதழின் முகப்பட்டை அலங்கரிக்கிறதென்றால் அது குன்றக்குடி ஆதீனத்தால் மட்டுமே முடியும் என்க!

இறைவனுக்குத் தாயுமானவன் என்ற பெயர் உண்டு என்பதை சீர்வளர்சீர் பொன்னம்பல சுவாமிகள் தாம் அடிபட்ட நிலையிலும் அந்த நள்ளிருளில் கருவுயிர்க்க உள்ள பெண்மணிக்கு இரங்கி உதவிய உதவியால் உறுதிப்படுகிறது.

அன்பின் வழியது உயர் நிலை என்ற தலையங்கத்தில் காட்டிய உயர்நிலையால் அன்பின் உயிர்ப்பு வழிகிறது. ஆம்! பிச்சைக்குருக்கள் கார் அந்தக் கால 108. உண்மைதானே! தருமையாதீனப் புலவரின் உக்கிரப் பெருவழுதியின் ஓர் ஆய்வு – கருத்துக் கருவூலமாக உள்ளது.

"பூவும் நாரும் -23" தலைப்பில் அண்ணன் சாமி. தீனா அவர்களின் எழுத்துப் பிழிவில் வாசகர்களைத் திக்குமுக்காட வைத்துவிட்டார். அருள்நெறித்தந்தை அருளிய வினாக்கள் பெரியபுராணக் கலங்கரை விளக்கமாகும். கட்டுரையாளரின் வினாவான – "வென்றது எது? காவியா! கருப்பா?" என்ற ஒன்றுக்கு அருள்நெறித் தந்தையே எப்பொழுதாவது சந்திக்கும் போது கட்டுரையாளரிடம் வினாவிய காவியா? கருப்பா என்றதே விடை போலிருந்தது எனக் கருத நேர்கிறது, தொல்காப்பியத்தில் வினாவே விடையாகும் என்றது போல் உள்ளது! (வினாவும் செப்பே வினா எதிர் வரினே – தொல்– சொல் – கிளவி.14) இந்தக் கட்டுரை எழுத்துத் தொடரில் எழுதிய – "தங்கத்தில் வைரம் பதித்தது போல" ஒன்று உள்ளது. அதுதான் "அடிகளார் பெரியாருக்காகத் தம் ஆசாரங்களை மாற்றிக்கொள்ளவில்லை. ஆனால் பெரியார் அடிகளாருக்காகத் தம் பழக்கங்களை மாற்றிக் கொண்டார்" என்ற கருத்தொன்றே வரலாற்றுத் தடம்பதித்த பதிவு. உண்மையில் அருள்நெறித் தந்தையாம் பூவைத் தொடுக்கும் சாமி தியாகராசர் நார் மணக்கிறது. மக்கள் சிந்தனையையும் மணக்கச் செய்கிறது.

– தெ. முருகசாமி, புதுச்சேரி

நவம்பர் 2013 – மக்கள் சிந்தனை இதழ்த் தலையங்கத்தில் சமூகம் எழுதியுள்ள "வாழ்வைப் பொருளாக்குவோம்" என்ற கட்டுரையில் வீடுபேறு என்பதற்குச் சமூகம் அதனை வீடு என்பதனுடன் இணைத்து வீட்டிற்குள்ள படி, நடை, கூடம், முற்றம், வெளி என்ற ஐந்துடன் ஐந்துவகை விளக்கங்கள் அளித்து இவ்வண்ணம் நடந்தால் ஐந்தாவதாகிய வெளியை – வீடுபேற்றினை அடையலாம் என்று விளக்கியுள்ளது சிறப்பாக உள்ளது என்பதைத் தெரிவித்து மகிழ்கிறேன்

– க. கதிரேசன், பூவாளூர்

Koviloor Digital Library


உ
சிவமயம்




தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
பழநி
பரிமள விலாஸ்

S.சித்தநாதன்

ஜவ்வாது வாசனை விபூதி
&
ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்
வாங்கி உபயோகியுங்கள்

Prop : S. சித்தனாதன் சன்ஸ்
அடிவாரம், பழநி - 624 601.

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

Phone: 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இயக்குநர்

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி, 2. அழகுக்கலை, 3.லெதர் & ரெக்ஸின் பொருட்கள் தயாரித்தல், 4. பற்றவைப்பு (ஆர்க் & கேஸ் வெல்டிங்), 5.செல்போன் பழுது நீக்குதல், 6. T.V, Radio- பழுது நீக்குதல், 7. எம்ப்ராய்டரி 8. பனை ஓலைப் பொருட்கள் தயாரித்தல், 9.வீட்டு வயரிங் வேலை செய்தல், 10. இரண்டு சக்கர வாகனம்பழுது நீக்குதல், 11. ஆபரண நகை தயாரித்தல், 12. திரை அச்சு வேலை, 13. சேலை டிசைனிங், 14. கைவினைப் பொருட்கள் தயாரித்தல், 15.பொம்மைகள் தயாரித்தல், 16. காகித உறை மற்றும் பைகள் தயாரித்தல், 17. வீட்டு உபயோகப்பொருட்கள் பழுது நீக்குதல், 18. உணவுப் பொருட்கள் தயாரித்தல், 19. பேப்ரிக் பெயிண்டிங், 20. சாக்பீஸ், மெழுகுவர்த்தி, பினாயில், சாம்பிராணி தயாரித்தல் 21. கயிறு திரித்தல், 22. GFRB பொருட்கள் தயாரிப்பு, 23. சேலை புதுப்பித்தல் சுருக்கம் நீக்குதல், 24. எலக்ட்ரானிக் சோக் தயாரித்தல், 25. கூடை முடைதல், 26.உல்லன் நிட்டிங் 27. நாப்கின் தயாரித்தல், 28. தையல் இயந்திரம் பழுது நீக்குதல், 29. போட்டோ லேமினேசன், 30. ஐஸ்கிரீம் தயாரித்தல் 31. காளான் வளர்ப்பு, மண்புழு உரம் தயாரித்தல்,

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

Koviloor Digital Library


# When you think of Gold
# Think of Indian Bank Gold




Gold coins / Bars

of 24 Carat - 999.9 Purity

*in 2g, 4g, 5g, 8g, 10g, 20g & 50g*

*Also available*

IB Swarnanidhi Recurring Deposit

*(for purchase of Gold Coins / Bars)*

For further details please contact our nearest branch :

- H.O.: 66, Rajaji Salai, Chennai 600 001
- Toll Free No.: 1800 425 1400
- Email : indbank@vsnl.com



इंडियन बैंक
Indian Bank

Taking Banking Technology to the Common Man

www.indianbank.in

Koviloor Digital Library

**BOOK POST**

**Book pocket containing printed matter**

**Price Rs. 8-00**

**MAKKAL CHINTHANAI - January 2014** Date of Publication 21-01-2014



**GO FOR A SAVINGS ACCOUNT**
**THAT GIVES YOU JUMBO BENEFITS**
**INCLUDING AN ACCIDENT INSURANCE***

Presenting Star Diamond & Star Suraksha Savings Accounts* that let you do more than just save. Avail of exciting benefits such as:

• Free SMS / Phone / ATM and internet banking • Personalized Cheque Book • Free Home delivery of demand draft (courier) • Free Statement of account on demand • International Gold credit card • International debit card • Allocation of a Relationship Manager • Free RTGS/NEFT through internet banking • Free SMS alerts for debit/credit transaction • Free demat account and maintenance charges • Free stop payment of cheque • Free inward cheque return charges • Free processing charges on personal / retail loans.

*Relationships beyond banking*



बैंक ऑफ इंडिया
Bank of India

Head Office : Star House, C-5, 'G' Block, Bandra Kurla Complex, Bandra (East), Mumbai - 400 051

Visit us at www.bankofindia.co.in

SMS "BOI<CITY>" TO 57575 e.g. "BOI MUMBAI" / Call Center 022 40919191

பெறுநர்

திரு ______________________________ அவர்கள்

______________________________

______________________________

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166